

சாந்தாகாரம் புஜகசயநம் பத்மநாபம் ஸுரேசம்
விச்வாகாரம் ககநஸத்ருசம் மேகவர்ணம் சுபாங்கம் |
லக்ஷ்மீகாந்தம் கமலநயனம் யோகிஹ்ருத் த்யாநகம்யம்
வந்தே விஷ்ணும் பவபயஹரம் ஸர்வலோகைக நாதம் ||

ஸ்ரீ விஷ்ணு சகஸ்ரநாமம்.

சாந்த ஸ்வரூபியும், சேஷசாயியும், பத்மநாபனும், தேவதேவனும், சராசராத்மகனும், ஆகாசம் போல் ஸர்வ வ்யாபியும், மேகவண்ணனும், அழகிய அங்கங்களையுடையவனும், லக்ஷ்மிகாந்தனும், கமலக்கண்ணனும், யோகிகளின் இதயத்தில் தியானத்தால் அடையத் தகுந்தவனும், ஜனன மான துன்பங்களைப் போக்குபவனும், எல்லா உலகிற்கும் ஒரே நாதனு மாகிய ஸ்ரீ மஹாவிஷ்ணுவை நமஸ்கரிக்கின்றேன்.

ஆகஸ்ட், 1986

# ஸப்தகிரி

இதழ் 3 மலர் 17

தனிப்பிரதி ரூ. 1 வருடச் சந்தா ரூ. 12

## உள்ளுறை



**அட்டைப்பட விளக்கம்**

முன்னட்டையில் : கோபாலகிருஷ்ணன்

—சித்திரம் : ஆர். பி. பாபுநாத்.

2-வது : திருமலை ஆணிவார ஆஸ்தானத்தின்போது இரவு புஷ்ப பல்லக்கில் உற்சவர்.

3-வது : திருமலை பவித்ரோத்சவம்.

*சிறப்பாசிரியர்*

திரு. எஸ். லக்ஷ்மிநாராயணு I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

*அச்சிடுபவர்*

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

*ஆசிரியர் :*

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

*துணையாசிரியர்:*

திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு :

THE WELFARE OFFICER
Publication Section, T.T.D
K. T. Road,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

உயிர் இனங்களிலேயே உயர்வான மனிதனை அம்மாமாயன் படைத்திட்டபோது, அவனுக்கு விண்ணில் பறக்க வகை செய்யவில்லை; நீரினில் மிதக்கத் துணை போகவில்லை. எல்லாவற்றிற்கும் மேலாக மனித இனம் மாண்புறும் வகையில் சிந்திக்கும் ஆற்றல் தந்து தன் படைப்பின் பெருமையைச் சொல்லா நின்றான். அச்சிந்தனையின் விளைவால் விஞ்ஞானம் சிறக்க, வானில் மிதக்கவும், நீரினில் மூழ்கவும் மனிதன் தேர்ச்சி பெற்றான். இச்சீரிய சிந்தனை தடுமாறி அதனால் ஆக்க வழி விலகி அழிவுக்கு வித்திடும்போது, அச்சிந்தனையைச் சீர்படுத்திட ஓர் உதவி தேவைப்பட்டது. அவ்வுதவியைத்தான் நம்மனோர் ''அவதாரம்'' என்றனர். இன்றைய விஞ்ஞான உலகிற்கு அவ்வவதாரம் விசித்திரமாகவோ ஏன் கேலிக்குறியதாகவோ இருக்கலாம். ஆனால் அவ்வவதாரங்களின் பின்னணியில் உள்ள நிகழ்ச்சிகளும், அவை காட்டிய உண்மைகளையும் மடமை என்று ஒருவன் கூறினால், அது, சிந்திக்கத் தெரிந்த மனித இனத்தில் அவனைப் படைத்திட்ட அவ்இறைவனின் மாபெரும் குற்றமாகவே கருதப்படும்.

யுகங்கள் பல தோன்றின. அவ்யுகங்கள் தோறும் இறைவனும் அவதாரம் மேற்கொண்டான். இது மனிதனுக்குச் சிந்தனை தடுமாற்றம் என்பது இயற்கை என்பதும், அத்தடுமாற்றம் தீயவற்றிற்கே அடிகோலிற்று என்பதையும் தெரிவிக்கின்றது. கடந்து சென்ற யுகங்களில் அழிவுகள் ஏற்பட்டதற்கும், தீயன நடந்ததற்கும் அடிப்படைக் காரணம் ஆணவம் எனும் பலவீனம் சில பலரை ஆட்டிப்படைத்ததனால்தான். இப்பலவீனத்தைக் கொண்டு அவனைப் படுகுழியில் தள்ளப்பார்த்தன ஆசை, கோபம், பொறாமை போன்றன. இக்குறைகளை உடையவன் எவ்வகையிலும் கடைத்தேற மாட்டான் என்பதைக் காட்டவே ஒவ்வொரு யுக நிகழ்ச்சிகளும் நடந்துள்ளன. நல்லவர்கள் பலர் இருந்தால் கெட்டவர்கள் கெட்டொழிவது உறுதி மற்றும் அவர்களை அழிப்பது எளிது என்பதும், நற்குணம், நற்சிந்தனை, நற்செயல் ஒருவரிடம் அமைந்தால், அவர்கள் உருவத்தால், நிறத்தால், இனத்தால் வேறுபட்டாலும் அவர்களை மக்கள் மகான்களாகக் கருதுவார்கள் என்பதும் திரேதாயுகம் வரை நடந்த நிகழ்ச்சிகள் நமக்குக் கூறும் பாடமாகும். இங்குத் தேவையிருந்தால் மட்டுமே தன் அவதாரத் தன்மையினைக் காட்டியும்,தனி ஒரு நல்ல மனிதனாலேயே சீர்கெடும் நாட்டைத் திருத்திட முடியும் என்பதைக் காட்ட இராமனாக வந்தும் தன் அவதார நோக்கத்தைப்பூர்த்தி செய்தான் அப்பூபாலன்.

அடுத்தது துவாபரயுகம். துவாபரயுகத்துக் காட்சிகள் கலியுகத்தின் ஒரு முன்னோட்டம் என்றே துணியலாம். ஆசை பேராசையானதும், கோபம் வெறியானதும், பொறாமை பொங்கியதும், தனிமனித பண்பு தரைமட்டமாகியதும், பொதுவில் தர்மம் தலைகீழானது இந்த துவாபரயுகத்தில்தான், வஞ்சமும் சூழ்ச்சியும், ஆள்பலமும் பணபலமும் பவனி வந்து அவனி நடுங்கின ஆரம்பச் சம்பவம் அங்குதான் தோன்றியது. இங்கு நல்லவர்களின் நல்லியல்புகள் பாராட்டப்படவில்லை. தீயோர்களின் தீங்குகள் திசையெங்கும் பரவின. வாய்மையின் வெல்லுமை அறிந்த பீஷ்மரும், துரோணரும் வாய்மூடி மௌனியானார்கள். வல்லோனும் நல்லோனுமான கர்ணன் விதி வழி வாளா இருந்தான். பெண்மையை ஆராதித்துப் பெருமை பெற்ற பாரத மண்ணில் தோன்றிய திரௌபதியின் மானம் அவலத்திற்குள்ளானபோது அதைக் கண்டும் வாளா இருந்த பாண்டவர்களின் நிலை துவாபரயுகத்து அவலத்தின் உச்சமாகும்.

நீதிக் கொவ்வா இச்செயல்களைத் தடுத்து நிறுத்த ஒரு தனி மனிதனாலோ அல்லது நல்லோர் சிலராலோ முடியவில்லை. வஞ்சகத்தை வஞ்சத்தாலும், சூழ்ச்சியைத் திட்டமிட்டும் முறியடிக்க வேண்டும் என்பதும், கற்றுத் தேர்ந்திருந்தாலும் அவன் தீக்குணங்களின் இருப்பிடமாகவோ, தீயவற்றிற்குத் துணை சென்றாலோ அவன் தூக்கி எறியப்பட வேண்டும் என்பதும், கடமை தவறினால் கடும் விளைவுகள்தான் எதிர்நோக்க நேரிடும் என்பதும், புலனின்ப வாழ்க்கை மற்றும் சுற்றமும் நட்பும் நிரந்தரமானது அல்ல என்பதும், அப்பரமனின் திருவடிகள்தாம் மனிதனுக்கு மனயமைதியினைத் தரவல்லதும் இறுதிப் புகலிடமுமாம் என்பது போன்ற அறவுரைகள் போதிக்கப்பட வேண்டியிருந்தன. அவற்றைப் போதித்தவன் துவாபரயுக அவதார நாயகன் கண்ணபெருமான்.

ஆணவமான கம்சன் அயர்ந்தபோது. புலன்களான காவலர்கள் உறங்கியபோது, அஞ்ஞான இருளை அகற்றும் பேரொளி போன்று, நடு இரவில் கண்ணன் ஞான ஒளியாகத் திருவவதாரம் செய்தான். அவதார நோக்கத்தைத் தன் திருவாயாலேயே அறிவித்து, தன் பரத்துவத்தைக் காட்டி பூபாரம் தீர்க்க, வந்தவன் கண்ணன். பாலலீலைகள் மூலமாக ஜாதி,நிற வேறுபாட்டைக் கடந்தது சேவை மனப்பான்மை என்பதை அறிவுறுத்தியும்,அர்ஜுனன்,உத்தவர்க்கு தந்த ஞான உபதேசம் மூலம் வாழ்க்கை தர்மத்தைக் கூறியும், யுதிஷ்ட்ரர் நடத்திய ராஜசூய யாகத்திற்கு வருகை புரிந்தோரின் கால்களைத் தாமாகவே கழுவியதன் மூலம் கற்றவர்முன் பணிதல் அவசியம் என்பதைக் காட்டியும், தர்மத்தின் மூலம் பக்தியின் சிறப்பையும், பக்தியின் வழி ஞானத்தின் அருமையினை விளக்கியும், சுதாமருடன் தான் கொண்ட நட்புறவின் மூலம் அஷ்ட பாசங்களால் கட்டுண்ட ஜீவன் அவன் மனைவி எனும் சத்வ குணத்தால் வசீகரிக்கப்பட்டால் அதனால் சித்த சுத்தி பெற்று, சரணாகதி பெருமை அறிந்து ஜீவ பிரம்ம ஐக்கிய நிலை எளிதில் அடையப் பெறலாம் என்பதை விளக்கியும், அபிமன்யு கடோத்கஜன் ஆகியோரை களப்பலியிட்டுத் தியாகத்தின் பெருமை பேசியும் பரமனது கிருஷ்ணாவதாரம் திகழ்ந்தது.

கண்ணன் காட்டிய மற்றும் கூறிய பல நிகழ்ச்சிகளையும், அறவுரைகளையும் இக்கலியுக மனிதன் தனக்கு உணர்த்தப்பட்ட வாழ்க்கை உண்மைகள் என்பதை அறிந்து தெளிந்தால், அது, இறைவனின் அடுத்த கலியுக அவதார நோக்க நிறைவேற்றம் சற்றே எளிதாக அமைய வழிவகுக்கும்.

# செய்திச் சுருக்கம்

## பவித்ரோத்சவம

பவித்ரோத்சவம் என்றால் புனித விழா என்று பொருள்படும். கோயிலின் ஆன்மீகச் சூழ்நிலையைத் தொடர்ந்து நிலவச் செய்யும் பொருட்டு ஒவ்வொரு ஆண்டும் இவ்விழா கோயில் அரங்கினுள் மேற்கொள்ளப்படும். கி. பி. 1464-ம் ஆண்டைச் சார்ந்த கல்வெட்டுக் குறிப்பு ஒன்றிலிருந்து இவ்விழாவைப் பற்றிய முதற்செய்தி காணப்படுகின்றது. இக்கல்வெட்டுக் குறிப்பிலிருந்து மேலும் நாம் அறிவதாவது: இவ்விழா ஆவணி மாதத்தில் 3 நாட்கள் வேத கோஷங்களுடனும் மந்திர ஒலிகளுடனும் திருமலைக் கோயிலில் நடைபெற்று வந்தது. இக்கோயில் வருவாய்க்கென ஏலம்பாக்கம் என்னும் கிராமம் மானியமாக வழங்கப்பட்டது என்பதும், மேலும் ஏலமண்டியம், விக்ரமாதித்திய மங்கலம் எனும் ஊர்களிலுள்ள கோயில் நிலங்களுக்கு நீர்ப்பாசன வசதிக்கு மேற்கூறிய கிராமத்தில் இரண்டு ஊற்றுக் கால்வாய்கள் தோண்டப்பட்டன என்றும் இவற்றினால் பெறும் வருவாய் இக்கோயிலில் நடத்தப்படும் 'பவித்ரோத்சவம்' விழாவிற்குச் செலவிடப்பட்டது என்று கூறுகின்றது.

ஆவணி மாதம் சுக்ல தசமி நாள் இரவன்று நடத்தப்படும் அங்குராப்பண நாள் தவிர்த்து இவ்விழா 5 நாட்கள் கொண்டாடப்பட்டது. 5-வது நாளான ஆவணி பௌர்ணமியை (சிராவண பௌர்ணமி) முதல் மூன்று குலத்தார் புனித நாளாகக் கொண்டாடினர். ஏகாதசி நாளன்று உற்சவமூர்த்தி திருமாமணி மண்டபத்தை அலங்கரிப்பார். துவாதசி நாளன்று இறைவன் திருபவித்ரத்தால் (திரித்த புனித நூலால்) அலங்கரிக்கப்பட்டுத் தனது நாச்சியார்களுடன் திருவீதி வலம் வருவார். 'விஷ்ணு பவித்ராரோபணம்' என்று கூறப்படும் ஆவணிமாதம் சுக்ல துவாதசி நாளன்று இறைவன் யஞ்னோ பவித்ரத்தால் அலங்கரிக்கப்படுவார். இவ்ஐந்து நாட்களின் போது ஒவ்வொரு நாளும் கோயில் அரங்கினுள் வேதங்கள் ஒருபுறம் ஓதப்பட, மறுபுறம் புராணச் சொற்பொழிவுகள் நடைபெற, வளர்க்கப்பட்டஹோமத்தீ எங்கும் காற்றினில் கலந்து சூழ்ந்து திருக்கோயிலின் சுற்றுப்புறச் சூழ்நிலை பக்தியின் எல்லையைத் தொடும்.

இவ்வாறு கொண்டாடப்பட்ட இவ்விழா கி. பி. 1562 வரை நடைபெற்று வந்ததாகத் தெரிகின்றது. பின்னர் எக்காரணத்தால், எப்பொழுது இவ்விழா தொடர்ந்து கொண்டாடப்படவில்லை என்பது திட்டவட்டமாக அறிந்துகொள்ள முடியவில்லை. ஆனால் பல ஆண்டுகள் பிறகு அண்மையில் இவ்விழா மீண்டும் கொண்டாடப்பட்டு வருகின்றது. அவ்வகையில் இவ்வாண்டும் "பவித்ரோத்சவம்" 15—8—86 முதல் 17—8—86 வரை மூன்று நாட்கள் திருமலையில் வெகு விமரிசையாகக் கொண்டாடப்படும். இதுபோது யாத்ரிகர்கள் பலர் திருமலைக்கு வருகை புரிந்து ஏழுமலையானின் தரிசனம் பெறுமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

## வராக சுவாமி சத்திரம் :

ரூ. 2.25 கோடி செலவில், திருமலையில் பெருந்தேவி தோட்டத்திற்கருகே மூன்று தளங்களையும், 240 அறைகளையும் கொண்ட 'ஸ்ரீ வராக சுவாமி' சத்திரம் ஒன்று விரைவில் கட்டப்பட உள்ளது. மேலும் திருமலையில் உள்ள முதல் சத்திரத்தில் ரூ. 4.10 இலட்சம் செலவில் அமைக்கப்படவிருக்கும் 'சூரிய ஒளி சக்தி' சாதனத்தின்மூலம் சுடுநீர் வழங்கிடும் வசதி மேற்கொள்ளப்பட உள்ளது.

## மற்றையச் செய்திகள் .

திருப்பதியில் உள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் உடல் ஊன முற்றோரின் 'பாலாஜி காம்ப்ளக்ஸ்' துறையினர்க்கு, அத்துறை சம்பந்தப்பட்ட சில புதிய நவீன கருவிகளை வாங்குதற்கு ரூ. 10 இலட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது.

சமய நிகழ்ச்சிகளை நடத்துவதற்கென ஹைதராபாத் நல்ல குண்ட்டா டாவில் உள்ள ஸ்ரீ சங்கர ஸேவா சமதியினர்க்கு தி. தி. தே. மேலாண்மை ரூ. 13,618/- வழங்கியுள்ளது.

கரீம் நகரில் மேட்பள்ளியில், தி.தி. தேவஸ்தானத்திற்கு வழங்கப்பட்ட 1 ஏக்கர் நிலத்தில், உள்ளூர் மக்கள் தந்த நன்கொடையானரூ. 75,000/- ஐப் பெற்றுக்கொண்டு, அங்கு ஒரு திருமண மண்டபத்தினைக் கட்டுவதென தி.தி.தே. முடிவுசெய்துள்ளது.

திருப்பதியில் உள்ள ஸ்ரீ தியாகராஜ சுவாமி கோயில் கட்டிட நிறுவனத்திற்கு 1986-ம் ஆண்டு இசை நிகழ்ச்சிகள் நடத்துவதற்கென ரூ. 25,000 தி. தி. தே. வழங்கியுள்ளது.

இனிமேற்கொண்டு திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயிலில் நடத்தப்படும் நித்ய ஹாரத்தி மற்றும் நித்ய நவநீத ஹாரத்தி ஆகியவற்றிற்குக் கட்டணம் வசூலிப்பது இல்லை என்ற ஒரு தீர்மானத்தை தி. தி. தே. நிறைவேற்றியுள்ளது. எனினும் சில குறிப்பிட்ட மடங்கள் தினமும் நித்ய ஹாரத்திக்கு அனுமதிக்கப்பட்டிருக்கின்றன.

திருமலையில் தி. தி. தே. ஊழியர்களுக்கு வழங்கப்படுவதைப்போலவே, கல்யாண கட்டா சிகை மழிப்போர்க்கும் 'அங்கோலா ஷாவல்'கள் வழங்கப்படும்.

## திருப்பதியில் 'வாயுதூத்' :

திருப்பதியில் அதிக அளவில் விமானம் மூலம் வரும் யாத்திரிகர்களின் நன்மைக்காக 'வாயுதூத்' போக்குவரத்து ஒன்று அண்மையில் திருப்பதியில் ஆந்திர மாநில வேளாண்மைத் துறை அமைச்சர் திரு. ஆர். ராஜகோபால ரெட்டி அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. தற்போது வாரத்திற்கு மூன்று நாட்கள் மட்டுமே விமானப் போக்குவரத்து திருப்பதியில் செயற்படுத்தப்படுகின்றது. இவ்'வாயுதூத்' உதவியால், நாளும் போக்குவரத்து செயற்பட உள்ளது.

## விண்ணப்பம்

இனிமேற்கொண்டு திருமலையில் நித்ய அன்ன தான திட்டத்திற்கென வழங்கப்படும் ரூ. 10 இலட்சத்திற்கு நாள்தோறும் 400 நபர்கள் மட்டுமே அன்னதானம் பெறுவார்கள். முன்பே இத்திட்டத்திற்கென ரூ. 10 இலட்சம் வழங்கிய தொகைக்கு மட்டுமே 500 நபர்கள் தினந்தோறும் அன்னதானம் பெறுவார்கள். இத்திட்டத்திற்கென நன்கொடை வழங்க விரும்பும் நபர்கள் நாள்தோறும் 500 நபர்களுக்கு அன்னதானம் வழங்க விரும்பினால் அவர்கள் ரூ. 12.5 இலட்சம் வழங்க வேண்டும்.

# மீரா பாடிய கண்ணன்

பக்திப் பயிரைச் செழிப்புடன் காத்து வளர்த்த பெருமையை உடையது நம் பாரத நாடு. அப்பயிரை வளர்க்க வேண்டிப் பலப்பல பக்தர்கள் இறைவனைப் புகழ்ந்து பாக்களைப் பாடி அதையே எருவாக்கினர். அவ்வாறு அவர்கள் பாடிய பாடல்கள்—இறைவனை மகிழ்வித்த பாடல்கள் பெரும் பக்தி இலக்கியத் தொகுப்புக்களாய் உள்ளன. இவை ஒவ்வொரு மதத்திலும் உண்டு.

இறைவனிடத்தில் பக்தி கொள்ள வேண்டியதன் அவசியமென்ன? அதனால் விளையும் பலன் யாது? எனும் வினா நம்முள்ளத்தெழுவது இயற்கை. பக்தியைக் குறித்து வடமொழிச் சுலோகம் ஒன்று 'பக்தி ரசாம்ருத சிந்து' என்று குறிப்பிடுகிறது.

மேலும் பாரதப் போரின் விளைவால் இவ்வையகத்திற்குக் கிடைத்த அரும்பெரும் பொக்கிஷம் பகவத் கீதையாகும். இதில் கண்ண பெருமான் தன்பால் பக்தி செலுத்த வேண்டியதன் அவசியத்தையும், அதனால் ஏற்படும் பயன்பற்றியும் தானே கூறுகின்றார்; கேளுங்கள்.

"மன்மனா भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु।
मामेवैष्यसि सत्यं ते प्रतिजाने प्रियोऽसि मे॥"

பெரும் சத்தியம் ஒன்றை உலகிற்கு உணர்த்த எண்ணிய இறைவன், 'என்பால் மனம்வைத்து, என்னிடம் பக்தி பூண்டு என்னை வழிபடுவாய் என்னையே வணங்குவாய். நீ அவ்வாறு செய்தால் எனக்கு இனியனாவாய். மேலும் என்னையே அடைவாய். இதற்கு நான் உறுதி கூறுகிறேன்' என இறைவன் உலகிற்குப் பக்தியின் மேன்மை குறித்துத் தெளிவாகக் குறிப்பிடுகிறார்.

தமிழகத்தில் வைணவத்தைப் பரப்புதற்குத் தோன்றியவர்கள் ஆழ்வார்கள். பன்னிரு ஆழ்வார்களில் ஒரே பெண் ஆழ்வார் ஆண்டாள் நாச்சியார். அவர் இயற்றிய திருப்பாவை இன்று தமிழகமெங்கும் விளங்கும் கோயில்களில் படிக்கப்படுவதையும், விளக்க உரைகள் சொல்லப்படுவதையும் காண்கிறோம். தமிழகம் செய்த நற்றவத்தால் அது ஆண்டாளைப் பெற்றது. அதே போல் இந்தி இலக்கிய உலகம் செய்த நற்றவத்தால் அவதரித்தவள் மீராபாய்.

திரு. கே. இராமநாதன், பி.ஏ.,
சேலம்-6.

மீரா என்றதும் அவள் கண்ணன்பால் அளவற்ற பக்தி கொண்டிருந்தவள் எனும் எண்ணமே நம் எல்லோர் மனத்திலும் உண்டாகும். ஆனால் அவளது அன்பு எத்தகையது, எவ்வளவு ஆழமானது என்பது பலர் அறியாத ஒன்று. பிள்ளைப் பருவம் முதலே மீரா கண்ணன்பால் அளவற்ற பக்தி கொண்டு விளங்கினாள். அவள் உள்ளத்தில் கண்ணன் குடி கொண்ட நிகழ்ச்சியாகப் பல கதைகள் கூறப்படுகின்றன. அவைகளில் கீழ்க்கண்ட நிகழ்ச்சி சுவைமிக்க ஒன்று.



ஒரு நாள் மீரா வீட்டில் விளையாடிக் கொண்டிருந்தாள். அப்போது அத்தெருவில் இன்னிசை மேளம்

முழங்கத் திருமண ஊர்வலம் ஒன்று சென்று கொண்டிருந்தது. அதைக் கண்ட மீரா தன் அன்னையிடம் சென்று, "அம்மா என் திருமணம் யாருடன் நடக்கும்?" என்று அறியாமை பொங்கக் கேட்டாள். அவளது இக்கேள்வி அன்னையின் முகத்தில் புன்முறுவலை வரவழைக்கச் செய்தது. இருப்பினும் குழந்தைக்குப் பதில் சொல்ல எண்ணி, வீட்டிலிருந்த கண்ணனின் திருவுருவச் சிலையைக் காட்டி, "இவரோடுதான் உன் திருமணம் நடைபெறும்" என்று கூறினாள். அன்னையின் பதிலை உண்மை என நம்பிய அக்குழந்தை, அன்று முதல் கண்ணன்பால் காதல் கொண்டது. நாள்தோறும் அச்சிலையைப் பூக்களால் அலங்கரிப்பதும், அதன் எதிரே இன்னிசைப் பாடல்களைப் பாடுவதுமாய் இருந்தாள். அவள் வளர வளர, வளர்பிறை என கண்ணன்பால் அவள் கொண்டிருந்த பக்தியும் வளர்ந்தது.

மேவார் நாட்டின் இளவரசன் போஜராஜனுடன் அவளது திருமணம் நடைபெற்றது. புக்ககம் புகுந்த போதும்கூட அவள் கண்ணனின் உருவச் சிலையுடனே சென்றாள். ஆனால் அவளது கணவன் விதி வசத்தால் ஒரு சில ஆண்டுகளிலேயே இறந்தான். மீரா இளமையிலேயே விதவையானாள். இளமை முதற்கொண்டே அவள் அனுபவித்த துன்பங்கள் ஏராளம். சிறு வயதிலேயே தாய், தந்தையரை இழந்தாள்; தன் கணவனையும் இழந்தாள். இத்தகைய இழப்புக்கள் அவளை வந்தடைந்த போதிலும் கண்ணன்பால் கொண்டிருந்த பக்தியை இழந்தாளில்லை. மாறாக அது காட்டாற்று வெள்ளமென அவளது உள்ளத்தில் பெரும் வேகத்தோடு பெருக்கெடுத்தோடவே செய்தது. இதன் காரணமாய் அவள் அனுபவிக்க நேர்ந்த துன்பங்கள் பலவற்றையும் துணிவுடன் எதிர்கொண்டாள். தங்கம் நெருப்பிலிட்டுக் காய்ச்சக் காய்ச்ச அதன் ஒளி கூடுமே ஒழியக் குறையாது. அதுபோல் மீராவைத் துன்பங்கள் பல சூழ்ந்த போதும் அவை அவளின் பக்திக்கு உரம் ஊட்டுவனவாகவே ஆயின.

கண்ணனின் பக்தியை உலகில் பரப்பிய தொண்டர்களில் குறிப்பிடத்தக்கவர் வல்லபாச்சார்யார். அவர், இறைவனுடன் தொடர்பினை ஏற்படுத்திக் கொள்ளும் வழிகளாக நான்கு வழிகளைக் குறிப்பிடுகின்றார்: அவை வாத்சல்யம், தாஸ்யம், சக்யம், மாதுர்யம் என்பனவாம். இந்நான்கு கோணங்களிலும் மீராவின் பாடல்களை நோக்கும்போது நமக்கு பலப்பல செய்திகள் கிடைக்கின்றன. மீராவின் பாடல்கள் அவளது உள்ளத்து உணர்ச்சிப் பெருக்கை மட்டுமல்லாது, கண்ணனின் புகழையும், பெருமையையும் வெளிச்சமிட்டுக் காட்டும் வைர மணிகளாயும் விளங்குகின்றன.

மீரா பாடிய கண்ணன் மகா பாரதத்தில் வரும் வீரப்பெருமகனல்ல. மாறாக கருநீல வண்ணனும் கண்டோர் உளம் கவரும் வகையில் வடிவத்தை உடையவனும், தன் சிறு குறும்புகளால் கோபியர் மனத்தை சிறைப்படுத்தியவனும் ஆவான். அந்த மனமோகன கோபாலனின் உருவத்தை உருவகித்து உள்ளம் உருகப் பாடுகிறாள் மீரா. அவள் கண்முன் கண்ணனின் அழகிய உருவம் தோன்றுகிறது. அவனது திருமுடியில் மயிலிறகுகள் விளங்குகின்றன. காதுகளில் மகர வடிவக் குண்டலங்கள் ஒளிர்கின்றன. அழகிய திருமார்பின்மீது வைஜந்தி மாலை தவழ்கிறது. நெற்றியில் சிவப்புத் திலகம் அணி செய்கிறது. சிவந்த இதழ்களின் மீது இசையால் உயிரினங்களின் உணர்வுகளைக் கவர வல்ல வேய்ங்குழல் விளங்குகின்றது.

'கண்ணனின் திருவடி எண்ணுக மனமே' என்ற பாரதியின் குரலுக்கேற்ப, கண்ணனின் திருவடிப் பெருமையை மீரா போற்றிப் பாடுகிறாள். "கண்ணனின் திருவடி தாமரை மலரை ஒத்த மென்மையும், தன்மையும் கொண்டது. அவன் பாதங்களே காளிங்கன் எனும் கொடிய நாகத்தின் கொட்டத்தை அடக்கின. அவன் பாதங்களே வையகத்தை அளந்தன. அவன் பாதங்களைப்பற்றியதனாலே பக்தன் பிரகலாதன் வீடு பேற்றைப் பெற்றான். அவன் பாதங்களே வாழ்க்கை எனும் துன்பக் கடலை நீந்திக் கரை சேர்க்கவல்ல படகுகள்" எனப் பாடுகிறாள்.

கண்ணனின் திருவடித் தாமரைக்காக ஏங்கித் தவிக்கும் மீராவை முரளீதரனின் வேய்ங்குழல் நாதம் ஈர்க்கிறது. யமுனை நதிக்கரையில் இருந்து கொண்டு கண்ணன் எழுப்பும் இனிய நாதம் அவள் இதயத்தைக் கவர்ந்து செல்கிறது.

எங்கிருந்து வருகுவதோ?-ஒலி
யாவர் செய்குவதோ?-அடிதோழி!

என்றான்

................................

மதி மருண்டிடச் செய்குதடி-இஃது

என்று பைந்தமிழ்ப் புலவன் பாரதியின் கூற்றுப்படி, மீராவின் உள்ளம் அமைதியின்றித் தவிக்கிறது. அவனது குழல் நாதம் செவியிற்சேர, அவள் புலன்கள் அவளைவிட்டு நழுவுகின்றன. உடல் நடுக்கமுறுகிறது. தனது இவ்வேதனையை விரைந்து அகற்றிட வேண்டிக் கண்ணனைக் கூவி அழைக்கின்றாள்.

தன் உள்ளம் கவர்ந்த மன்னன் கண்ணனின் தரிசனம் பெற மீராவின் உள்ளம் வேட்கையுறுகிறது. அங்கே கண்ணன் கடம்ப மரத்தின் கிளை ஒன்றினைப் பற்றிக் கொண்டு புன்னகை தவழும் முகத்துடன் நின்றிருப்பதைக் காண்கிறாள். எல்லாமாய் நிற்கும் அவ்விறைவனுக்கே தன்னை அர்ப்பணித்து விடுகின்றாள்.

கண்ணனின் பிரிவால் வாடும் போது எத்தகைய நிலை ஏற்படுமோ, அத்தகைய நிலையில் நின்று பாடுகிறாள் மீரா. கண்ணனின் பிரிவிலும் ஒரு சுகம் இழையோடுவதுபோல்

அவளது பாடல்கள் அமைந்துள்ளன. இன்பம் என்பது வாழ்வின் மேல் பகுதியைத்தான் தொடும். ஆனால் பிரிவு எனும் துன்பமானது மனித உள்ளத்தின் ஆழத்தைத் தொடு கிறது. உள்ளத்தின் உணர்வுகளைத் தூண்டிடச் செய்வது பிரிவு எனும் துன்பமே.

கண்ணனிடம் காதல் கொண்டது அவளது மனம். அவளது கண்களோ, நீலவண்ணன் கண்ணனைக் காண வேண்டி ஏக்கம் கொண்டன. கண்ண னின் இனிய வடிவம் அவளது உள் ளத்தில் ஆழப்பதிந்துவிட்டது. கண்ணனிடம் கொண்ட காதல் உச்ச நிலையை அடைந்துவிட்டது. கண் ணனைக் காணத் தவிக்கிறாள் மீரா. அரண்மனையின் மாடி முகப்பில் நின்று பார்வையைச் செலுத்துகிறாள். பார்வைக்கு எட்டிய தூரம் வரை கூர்ந்து பார்க்கிறாள். ஆனால் கண் ணனோ வரவில்லை. ஏமாற்றமடைந்த மீரா கண்ணன் ஏன் வரவில்லை என்று தன் உள்ளத்தையே வினவி நிற்கிறாள்.

கண்ணனைக் கண்டு காதல் கொண்ட அவள் கண்களுக்கு இப்போது நோக்கு மிடமெல்லாம் கண்ணனின் உருவமே தெரிகிறது. மேகத்தின் வரவை எதிர் நோக்கி நிற்கும் சாதகப் பறவை போன்றும், தண்ணீரிலிருந்து தரையில் விழுந்த மீனே போன்றும் பிரிவுத் துயரால் மீரா துடிக்கிறாள். கண்ணனின் பிரிவு அவளின் உள் ளத்தை மட்டுமல்ல உடலையும் உருக் குலையச் செய்கிறது. பித்துப் பிடித் தவள் போலாகிறாள். உடல் மெலி கிறது. மரங்களின் பழுத்த இலை களைப்போல் உடல் பசலையால் வெளுக்கிறது. அவளது நிலை கண்டு துயருற்ற தோழிகள் ஆறுதல் மொழி கள் அவளின் துன்பத்தைக் குறைக் காமல் அதிகரிக்கவே செய்தன.

துயருற்ற மீரா தன் தோழிகளி டம், "பிரிவுத் துயரில் ஆழ்ந்து தவிப் பவர்களே என்னுடைய துன்பத்தை உணர முடியும். எவ்வாறு மரப்பூச்சி மரத்தின் உள்ளே புகுந்து உட்பகுதி யைத் தின்று தீர்க்கிறதோ அதுபோல் கண்ணனிடம் நான் கொண்ட பிரேமை என்னையே தின்று கொண்டு இருக்கிறது. இந்நிலையிலிருந்து என்னைக் காக்க வேண்டுமானால் வைத் தியன் கண்ணன் வந்தால்தான் இய லும்" என்கிறாள்.

கண்ணனுடன் ஆயர்ப்பாடியில் ஓடி விளையாடி மகிழ்ந்த கோபிகைப் பெண்களை மறக்க இயலாது. சில சமயங்களில் மீராவும் தன்னை ஆயர்ப் பாடியில் வாழ்ந்த ஒரு கோபிகைப் பெண்ணாய் பாவித்துப் பாடுகிறாள். அவ்வாறு அவள் பாடிய பாடல்களில் காதல் வயப்பட்ட பெண்ணின் உணர்ச்சி வெளியீட்டைக் காண் கிறோம். மீரா தயிர் விற்பதற்காகப் பிருந்தாவனத்திற்கு வருகிறாள். அங்கே கண்ணனைக் கண்டு மோகம் கொள்கிறாள். "தயிர் வாங்கலையோ! தயிர்!" என்று கூவி வந்தவள், இப் போது கண்ணனைக் கண்டவுடன் தன்னையே மறந்தாள். "கண்ணன் வாங்கலையோ! கண்ணன்!" என்று கூவுகிறாள். தன் உள்ளத்தைக் கண் ணன்பால் பறிகொடுத்தனால் வந்த வினை இது.

இயற்கையின் இனிய நிலைகள் இன் பம் நிறைந்த காலத்தே இன்பத்தை மேலும் கூட்டும் தன்மை வாய்ந் தவை. ஆனால் தலைவனின் பிரிவுக் காலத்தே அவையே பெரும் எதிரி களாய் மாறித் தலைவியை அச்சுறுத் தும் தன்மையாய் விளங்குகின்றன. மீராவின் பாடல்களிலும் அத்தகைய வெளிப்பாட்டையே நாம் காண முடி கிறது.

ஆவணி மாதம் வருகிறது. அது தன்னுடன் மழைக் கால கார்மேகங் களையும் அழைத்து வருகிறது. மழை யின் வரவைக் கண்டு அகமகிழ்ந்த மயில்கள் தங்களின் அழகிய தோகை களை விரித்து நடனமாடுகின்றன. குயில்களோ இறைவன் தந்த இனிய குரலைக் கொண்டு தேவகானம் இசைக் கின்றன. மலர்கள் மலர்ந்து விரிந்து தங்கள் அகமகிழ்ச்சியைத் தெரிவிக்



ஆயிரக்கால் மண்டபம் — ஹனுமகொண்டா (ஆ. பி.)
திரு. ஷேக் மௌலானா — குண்ட்டூர்.

கின்றன. ஆனால் இவையெல்லாம் கூட மீராவின் இதய தாகத்தைத் தீர்ப்பதில் தோல்வியே கண்டன. அவள் குயிலை நோக்கி, "என் இனிய குயிலே! கூ, கூ எனக் கூவிப்பாடுதலை விடுப்பாயாக!" என்று வேண்டுகின்றாள். இது அவளது உள்ளத்தின் ஆழமான காதலைப் புலப்படுத்தும் கண்ணாடியாய் அமைந்துள்ளது.

நாம் இதுவரை கண்டது மீராவின் வாழ்க்கைப் பகுதியின் ஒரு பகுதி. பிறிதொரு பகுதி துன்பங்களால் அமைந்த பகுதி. இளமையில் கணவனை இழந்து கைம்பெண் ஆனாள். ஆனால் அதற்குப் பின்பு அவள் சந்தித்த துன்பங்கள் பலப்பல. மீரா அரச குடும்பத்தைச் சார்ந்த பெண். எனவே அதற்கென விதி முறைகள், கட்டுப்பாடுகள் முதலியன உண்டு. ஆனால் மீரா அத்தகைய கட்டுப்பாடுகளையெல்லாம் தூக்கியெறிந்தாள். கண்ணனின் கோவிலுக்குச் சென்று கைத்தாளமிட்டுப் பாடி ஆடலானாள். இது அவளது குடும்பத்தார்க்கு எரிச்சலை ஏற்படுத்தியது.

அவள் பாடிய பாடல்களின் மூலமே பல செய்திகள் கிடைக்கின்றன. 'அரச பந்தங்களையும், கட்டுப்பாட்டையும் துறந்ததனால் குடும்பமானம் குலைத்தாயே' எனத் தனது மாமி வருந்துவதாகக் குறிப்பிடுகிறாள்.

மேவார் நாட்டு மன்னன் ராணா மீராவைக் கொல்லுவதற்குப் பலப் பல சதித் திட்டங்கள் தீட்டினான். ஒரு முறை பூக்கள் நிரம்பிய கூடையில் பாம்பினை வைத்துப் பரிசாக மீராவிற்கு அனுப்பினான். மீரா அக்கூடையைத் திறந்த போது அதில் பாம்பு இல்லை. மாறாக இறைவனின் அருளால் கண்ணனின் ஒரு சிறிய திருஉருவச் சிலையே இருந்தது.

ஒரு முறை ராணா விஷம் நிரம்பிய கிண்ணத்தை அவளிடம் கொடுத்தான். குளித்துவிட்டு வந்த மீரா இறைவனை நினைத்து ஒரு மடக்கு குடித்தாள். என்ன அதிசயம்! அவ் விஷம் அவளது உயிரைக் குடிக்கவில்லை! ஆம் விஷக்கிண்ணம் அமுதக் கிண்ணமாய் மாறியது.

மற்றொரு சமயம் ராணா கூரிய ஆணிகளால் அமைந்த மஞ்சத்தை அனுப்பி அதில் சயனிக்கக் கட்டளையிட்டான். கட்டளைக்குப் பணிந்த மீரா எவ்விதத் தயக்கமோ, நடுக்கமோ இன்றித் தூங்கினாள். ஆனால் அவளது பூவுடல் பட்டதும் அந்த முட்படுக்கையும் மலர்ப்படுக்கையாய் ஆனது.

ராணாவின் தொல்லைகள் அதிகரித்தன. இதனால் மீரா பெருந்துயருற்றாள். கண்ணன் அவதரித்த புண்ணிய பூமியான பிருந்தாவனத்தைக் காண வேண்டும் எனும் ஆசை அவள் உள்ளத்தே எழுந்தது. எனவே பிருந்தாவனம் வந்தடைந்தாள். இச்சமயத்தில் அவளது குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் ராஜஸ்தான் திரும்பி வர வேண்டி மீராவை அழைத்தனர். ராணாகூட தூதுக்குழு ஒன்றை அனுப்பி அவள் திரும்ப வேண்டுமென வற்புறுத்தினான். மேலும் அவளிடம் பொறுமை கொண்ட அவ்வூரினர் சிலர் அவள் திரும்பிச் செல்ல வேண்டும் என்றனர். ஆனால் மீரா முன்பு அனுபவித்த துன்பங்கள் காரணமாகத் திரும்பிச் செல்லத் தயங்கினாள்.

ஒரு நாள் மீரா அவ்வூர் மக்களிடம் தான் ஒரு நாள் ரணசோட்ஜீ எனும் கண்ணன் கோயிலில் தங்க வேண்டும் என்று விருப்பம் தெரிவித்தாள். ஊர் மக்களும் இசைந்தனர். மீரா அன்று இரவு கோயிலுக்குள் புகுந்தாள். மறுநாள் காலைக் கதிரவன் தன் கதிரொளி பரப்ப வந்தான். கோயில் திறக்கப்பட்டது. ஆனால், மீராவோ கோயிலில் இல்லை. எங்குத் தேடியும் அவள் கிடைக்கவில்லை.

ஆம், மீரா தன் இலட்சிய இடத்தை அடைந்துவிட்டாள். கண்ணனிடம் கொண்ட பக்தியைக் காதலாகவே மாற்றிக் கசிந்துருகிய மீரா அந்தக் கண்ணனையே பெற்றுவிட்டாள். மீரா தன் அன்புக் காதலனும் கண்ணனுடனேயே இரண்டறக் கலந்துவிட்டாள் என்றே பக்தி உலகம் நம்புகிறது.

கண்ணனின் பெருமையையும், புகழையும் பலப்பல கவிஞர்கள் கவிதைகளாய் வடித்தனர். மீராவும் கண்ணனைப்பற்றி எண்ணற்ற பாடல்களை இயற்றினாள். ஆனால் மீராவின் புகழ் இம்மியளவும் குறையாமல் இன்றளவும் நிலைத்திருப்பதற்குக் காரணம் என்ன? ஒரு மரத்தின் பெருமை அது தரும் கனியின் சுவையை ஒத்தே அமையும். மீராவின் புகழும் அத்தகையதே. அவள் பாடித்தந்த பாடல்களின் சுவையே இன்றளவும் அவளது புகழை குன்றின் மேலிட்ட விளக்கென ஒளிவீசிடச் செய்கின்றன.

மீராவின் பாடல்கள் ஒரு பக்தையின் உன்னதமான மேலும் தெள்ளத் தெளிந்த பக்திக் கருத்து. ஒரு கோபிகைப் பெண்ணின் காதல் உள்ளத்தின் உணர்ச்சிப் பெருக்கு. கண்ணனின் சீரிய பெருமைகளைத் தன்னகத்தே கொண்ட கருத்துக் கருவூலம். கண்ணனின் அன்புக் காதலியின் எண்ணச் சிதறல். இவ்வாறு பற்பல புகழ் மாலைகளைச் சூட்டினாலும் அவை இசையும், இன்பமும், கருத்தாழமும் கொண்ட அவளது பாடல்களுக்கு ஈடாகாது. வானவெளியில் நீந்தி வரும் நிலவிற்கு இணையாக செயற்கை நிலவொன்றை உலகம் கண்டுபிடித்து விடலாம். ஆனால் மீராவின் பாடல்களுக்கு இணையானதாய் பிறிதொன்றைக் காண்பது கடினம்.



" மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின் "

—இது தெய்வப் புலவரின் தேர்ந்த நீதி!

இதன் உட்பொருள் யாது? துறவிகள் எல்லாம் நாட்டில் நிரம்பி இருந்திருக்கிறார்கள். இன்றும் இருக்கிறார்கள். தெய்வாம்சம் பொருந்தியவர்கள் எத்தனையோ பேர்கள் உண்டே—ஒரு சிலர் தவறு செய்ததைக் கொண்டு மொத்தத்தில் துறவறம் மேற்கொண்டவர்கள் சடாமுடியோடு இருக்கும் நிலையோ, மழித்த சிரமுடன் இருப்பதோ அவர்கள் மனத்தைப் பொருத்ததே—இதை ஒரு பொருட்டாகக் கூறல் வள்ளுவருக்கு உரிய செயலா? என ஒரு சிலர் கூறலாம்.

# துறவு எது?

பரமக்குடி வெ. சுந்தரம்

உலகம் பழித்ததை ஒழிக்க வேண்டும் என்பதைத்தான் வலியுறுத்துகிறார். உலகத்திற்கு நன்மை பயக்காதச் செயல்களைச் செய்து கொண்டு வெளி வேடம் கொள்ள வேண்டாம். நல்ல செயல்களைச் செய்யும்போது மழித்தல் அல்லது நீட்டல் பற்றி யாரும் குறை கூறமாட்டார்கள். அவற்றைப் பற்றிய சிந்தனை ஏற்படாது என்ற அவரது கருத்தைப் புரிந்து கொள்ளும்போது, நன்மை பயக்கத்தக்க, உலகம் பழிக்கும் செயல் யாது என்பதை உணர வழி வகுக்கும்.

இங்கு 'உலகம்' என்ற சொல் உலகத்தை உருவாக்கி உலக நன்மைக்கும் தீமைக்கும், உலகச் செயல் யாவற்றிற்கும் காரண காரியமான இறைவன் என்பதைக் கொள்ளும்போது, இறைவன் விரும்பாத செயல்கள் என்பது உட்பொருள் எனப் புரியும்.

இறைவன் விரும்புவது எது? விரும்பாதது எது? இதில் பலரும் பல்வேறு கருத்தைக் கூறலாம். "இறைவன் என்பவனே விருப்பு, வெறுப்பற்றவன் என நீதி புகட்டும் வேதங்கள் கூறும்போது, விரும்புகிறான் என்பதோ வெறுக்கிறான் என்பதோ வெளிவேடம் தானே" என வாதிடலாம்.

கத்தியைக் கையிலெடுத்துக் கட்டி வந்த இடத்தில் அறுவை சிகிச்சை செய்யும்போது நோயாளன் வலியால் துடிப்பான் என்று, வலியின் தன்மையை உணர்ந்த போதிலும், நோயிலிருந்து குணமடையச் செய்ய வேண்டுமென்ற ஒரே காரணத்தால் உயர்ந்த உள்ளத்தோடு மனத்தை ஒரு நிலைப்படுத்தி, நோயாளரின் கூச்சலை இனிய இன்னிசைபோல நினைத்து அறுவை சிகிச்சையை மருத்துவர் முடித்து விடுகிறார். இச்செயலில் மருத்துவர் தன் செயல் வெற்றி பெற்று நோயாளன் பூரண குணமடைய உதவும்போது கத்தியைப் பயன்படுத்தி அறுவை செய்யும் போது, மருந்திட்டுக் கட்டும்போது வலியால் நோயாளன் துடிப்பதை நினைத்தால், கூச்சலிட்டு அமர்க்களப் படுத்துவதை எண்ணி மனம் மாறுபட்டால் நோயாளி குணமடைய முடியுமா?

இந்த இடத்தில் மருத்துவர் பிறர் துன்பம் துடைத்தல் ஒன்றையே குறியாகக் கொண்டு தன்னைத் தூற்றும் சொல்லோ, பிறர் தன்மைகளையோ எண்ணாது முற்றிலும் 'துறவு' நிலை கொண்டதால்தானே நற்செயல் செய்ய முடிகிறது.

தன் ஆன்மாவின் எல்லையற்ற ஞான சக்தியை புறத்தேயுள்ள இழிந்த செயல்களில் செல்லவிடாது துன்பச் செயல்கள் யாவையும் துறத்தலே துறவு எனப்படும். இதற்குச் சான்றாக இறைவன் புகழ்பாடும் நிகழ்ச்சிகளான கதை புராணம் கூறுவதைக் கேட்கவோ, பக்திப் பாடல்களைக் கேட்கவோ சென்று அமர்ந்து கேட்டுக் கொண்டே இருக்கும் போது, நல்லவற்றை மனம் கேட்க விடாது. தூக்கம் வந்து கெடுக்கும். ஆனால் அதே நேரத்தில் ஆபாச மிகுந்த காட்சிகளைக் காணும் போது அல்லது கேட்கும்போது தூக்கம் வராதே! இதுதான் மாயை என்பது. இதுபோன்ற சமயத்தில் புராண நூல்களின் மகிமையைக் கேட்கும்போது, காட்சியாகப் பார்க்கும்போது வரும் தூக்கத்தைத் துறக்க வேண்டும். அதே போல ஆபாச நிகழ்ச்சிகளில் மனத்தைச் செல்ல விடாது தடுத்து நிறுத்த வேண்டும். இப்படிச் செய்வது சற்றுக் கடினமாக இருந்தாலும் தீமையைத் துறக்கும் பயிற்சி மேற்கொண்டு 'துறவு' என்பதின் உயர் தன்மையை உணர வேண்டும்.

வாழ்நாள் முழுவதும் இன்பம் பெறவேண்டும் என்று எண்ணும் போது எத்தனை விதமாக அல்லல்கள் ஏற்க வேண்டியுள்ளது. மனைவி, மக்கள் சீரும் சிறப்புமாக வாழ, தனக்கு எவ்வளவு துன்பங்கள் வந்தாலும் தாங்கிக் கொள்ளும் ஒருவன் பேரின்பம் எது என உணர்ந்து கொள்ள எவற்றைத் துறக்க வேண்டும்? துறவு எது? என உணர்ந்திடல் அவசியமாகும்.

பிறர் குற்றம் கண்டு விமர்சித்து அதன்மூலம் மகிழும் தன்மை இருக்கின்றதைத் துறப்பது அவசியம். வாழ்க்கையை வரம்புக்குள் அடக்க வேண்டும். நோய்க்கு மருந்தினை அளவாகக் கொடுப்பதுபோல உணவிலும், உறக்கத்திலும், உடலுழைப்பிலும் அளவுடன் செயல்பட வேண்டாமோ ஆவலால் அதிக உணவோ உழைப்போ, உறக்கமோ கொள்வதைத் துறக்க வேண்டும்.

மட்டரகமான புத்தகங்கள் படித்தல், கெட்ட பொருள்களைப் பார்த்

நல், அர்த்தமற்ற புகழை விரும்புநல், இவற்றைத் துறப்பதும் துறவுதான். ஜிலேபி போன்ற இனிப்புப் பொருள்கள் நாவிற்குச் சுவை தரக் கூடியதே என்றாலும் அளவுக்குமேல் உண்ணும்போது துன்பம் தானே? அதுபோலவே புகழும் கர்வத்தை ஏற்படுத்துவதால், புகழையும் அளவோடு ஏற்றுக் கொள்ள வேண்டும். நன்மை தீமையை சமமாகப் பாவிப்பதும் துறவு நிலைதான்.

வாழ்க்கையைத் துறந்து காவி பணிந்து, காட்டில் வாழ்ந்து தியானம் செய்வதுதான் துறவு என்றோ, மொட்டையடித்து, கோவணத்தோடு திரிவதுதான் துறவு என்றோ கருத இடமில்லாது பிரம்மச்சர்யம், இல்லறம், இல்லறத்தில் துறவறம், வானப்பிரஸ்தம் எனப்பிரித்து வாழ்ந்த முறை நாம் அறிந்தவை தானே! ரிஷிகளும் ரிஷிபத்தினிகளும் மக்கட் செல்வங்களோடு வாழ்ந்ததாக புராணம் கூறவில்லையா? அப்படியானால் துறவு எது?

தகாதவற்றைத் துறப்பது துறவு. அத்தோடு ஒவ்வொரு பணிக்கும் ஒரு காலத்தை வரையறை செய்து கொண்டு செயல்படும் சரியான தன்மைக்கு எத்தனையோ தடங்கல்கள் வந்து மனம் மாற வழியுண்டு. அப்படிப்பட்டத் தடங்கல்களைத் துறத்தல் துறவு.

எடுத்துக்கொண்ட காரியத்தில் வெற்றிகிட்ட ஒரே சிந்தனை வயப்பட்டுச் செயல்பட வேண்டும். அதுவே 'ஏகாக்ர சிந்தை' எனப்படும். இந்த ஒருமனப்படும் சிந்தை எப்போது வரும்? அதற்குத்தான் இறை வழிபாடு. இறைவனிடம் பக்தி செலுத்த பூஜை செய்தல். பூஜைக்குரிய முறைகள் ஏற்படுத்தி வைத்தனர். பூஜை செய்து இறைவனை தியானித்தல் என்பது தியான நேரத்தில் புறச் செயல்கள் யாவற்றையும் துறப்பதாகும். அதுதானே துறவு.

ஸ்ரீராமதாசர் ராமாயணம் எழுதிக் கொண்டே சீடர்களுக்கு விளக்கியும் வந்தார். சீடர்களோடு சீடராக அனுமன் அமர்ந்து இராம கதை கேட்டு ஆனந்தித்து வருகிறார். ஒரு நாள் ராமதாசர், 'அனுமன் அசோக வனத்தை அடைந்தார். அங்கே வெள்ளை மலர்களைக் கண்டார்' எனக் கூறினர்.

அமர்ந்திருந்த அனுமன் எழுந்து, 'நான் கண்டவை வெள்ளை மலர்கள் அல்ல - சிவப்பாகும். பிழையாக எழுதியதைத் திருத்துங்கள்' என்றார். 'நான் எழுதியது சரியே' என்கிறார் ராமதாசர். 'கண்டுவந்த நான் கூறுவது பொய்யோ?' என்கிறார் அனுமன். வழக்கு ஸ்ரீ ராமச்சந்திரமூர்த்தியிடமே முடிவிற்குச் செல்ல வேண்டியதாயிற்று.

'பூக்கள் வெண்மைதான். அனுமன் கண்கள் கோபத்தில் சிவந்திருந்ததால் மலர்கள் சிகப்பாகத் தோன்றின' என்றார் ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி. இதிலிருந்து ராமன்மீது செலுத்திய பக்தியின் காரணமாக அசோக வனத்தில் அனுமன் கண்டதை வெள்ளை மலர்களையும் ஸ்ரீராமதாசரால் உணர முடிந்தது. அந்த அளவிற்கு பக்தியின் தன்மையில் மனத்தை ஒருமைப் படுத்தி, பிற புறச் சூழலை அச்சமயம் துறந்தவர் ஸ்ரீராமதாசர்.

அதேபோல தன் தெய்வமான ஸ்ரீராமனின் தேவியான ஸ்ரீசீதா தேவியை தூக்கிச் சென்ற ராவணனின் மீதுகொண்ட வெகுளியால் கண்கள் சிவந்து அதனால் வெள்ளை மலர்கள் கூட சிவப்பாகத் தெரிந்தது என்றால் வேறு சிந்தனைகளைத் துறந்த துறவு நிலையை அனுமன் பெற்றது தானே காரணம்.

சித்தத்தின் ஒரு நிலைப்பட்ட தன்மையில் நன்மை பயக்கும் பக்தியை, பரமனைப் பணிந்திடக் கொள்ளும் தியானத்தை, ஞான வேள்வியைக் கொள்ள வேண்டி வரம்பு உள்ள வாழ்க்கையை, நன்மை தரும் சம நோக்கைக் கொள்ள பிற தீய எண்ணங்களைத் தீச்செயல்களை, அழியும் இன்பங்களைத் துறப்பதுதானே துறவு.

சுயமுயற்சியால் முன்னேறலும், தன் முயற்சி என்பதில் பொது நலத் தொண்டும் இணைந்து, ஆண்டவன் அருள் நோக்கை விரைந்து பற்றத் துணிந்து அதற்கான முயற்சி கொள்ளும்போது ஏற்படும் பல தடைகளான பாவச் செயல்கள் - காமக்

---

உத்தான பாதன் என்கிற மன்னனுடைய மகன் துருவன் ஐந்து மாதங்களிலும், பரீக்ஷித் மஹாராஜா ஏழு நாட்களிலும், பிங்களை என்கிற தேவதாசி மூன்றேமுக்கால் நாழிகையிலும், கட்வாங்கன் என்கிற ராஜரிஷி இரண்டு நாழிகையிலும், திட வைராக்கியம் மேற்கொண்டு பரமனின் பாதகமலங்களை சிந்தையில் பற்றி முக்தி அடைந்தார்கள்.

---

கள்ளம் கபடமற்ற கோகுல கோபிகைகளுக்கு வேலைக்காரனாக இருப்பாயே ஒழிய, புலன்களை அடக்கி வைராக்ய ஸம்பத்தை கொண்டவர்கள் உன்னைத் தலைவனாக இருக்கும்படி வேண்டினாலும் நீ செவி சாய்க்க மாட்டாய். இவர்களுக்குத் தலைவனாக இருந்தால் கூலி கொடுத்தாக வேண்டும். அதனை உயர்த்திக்கொண்டே இருக்க வேண்டும். இல்லாவிடில் வேலை நிறுத்தம். கோபிகள் விஷயத்தில் இந்த தொந்தரவு இல்லை.

— ஸ்ரீஸ்ரீ க்ருஷ்ணப்ரேமி சுவாமிகள் கூறியது.

அனுப்பியவர் : ஆர். சுப்பாராவ்—திருக்கோவலூர்.

குரோத மதமாச்சர்யங்களைத் துறப்பதுதானே துறவு.

அழிவது இவ்வுடல். அழியாதது ஆன்மா. அழியும் உடலின்மீது ஆசை கொண்டு ஆன்மாவைக் கவனிக்காது விடுதல் எவ்வாறு நன்மை தரும்? அருகிலிருப்பவன் நண்பன், உறவினன் என்ற ஆசாபாசங்கள் எனப்படும் மாயையைத் துறந்து, சிருஷ்டிகர்த்தாவின் ரகசியம் உணர்ந்து இன்பம் பெறுவதோடு மானுடன் யாவரும் இப்பேரின்பம் பெற பயன்பட நம்மை ஆளாக்கிக் கொள்ளும்போது பொது நலம் உயர்ந்து தன்னலம் துறக்கப்படுவதன்றோ துறவு.

இந்நாட்டையே தாய் நாடு என்றும், மொழியைத் தாய் மொழி என்பதும் எதனால்? பெண் கொள்ளும் துறவு அல்லவா காரணம்? அப்படி என்ன துறவு பெண்கள் கொள்கிறார்கள் எனலாம்.

பெற்று வளர்த்து ஆளாக்கிய பெற்றோரைத் துறந்து தாலி கட்டிய கணவனே தெய்வமென வந்து நற்றொண்டு புரிவது எப்படி? பெற்றோரைத் துறந்தது துறவுதானே! பின், தாய்மையடைந்த பின்பு குழந்தைக்காகத் தான் மருந்துண்டு, பத்தியம் காத்து உணவினையும் துறந்து, உறக்கமும் துறந்து வளர்ப்பது ஓர் துறவு தானே! வளர்ந்துவிட்ட பிள்ளைகளின் வாழ்க்கை நல்லபடியமைய தன் இன்பங்களைத் துறக்கவில்லையா? இவற்றிற்கும் மேலாக பக்தியும் கொண்டு விரத முதலான தன்மைகள் கைக்கொண்டு ஜெபம், உபவாசம் ஏற்றுப் பிறர் நலமே பெரிதெனத் தன்னலம் துறக்கவில்லையா? இதுவன்றோ உண்மையான, போற்றப்படும் உயர் துறவு!

ஏதேனும் ஒரு நன்மையை நாட்டிற்காக, நலிவுற்றவருக்காக, ஏழைக்காக, எளிமையில் வாழ்பவருக்காக, உதவி செய்ய விரும்பி, சொல், எழுத்து, செயல் மூலம் செய்யும் போது தனக்கு நன்மை உண்டா என்பதைப் பாராது, கீதையில் கண்ணன் கூறியது போல் 'பலனைக் கருதாதே-பாவமற்ற செயல் தொடர்ந்து செய்' என்பதை மனத்தில் கொண்டு, செய்யும் செயலில் கிட்டும் ஆனந்தமே பிற புறச் செயல்களான தீமைகளைத் துறக்கச் செய்யும் என்பதுதானே உண்மை.

என் ஆசையும், வெகுளியும், ஆண்டவனுக்கே அர்ப்பணம் என்று புனித நீராடல், புனித தெய்வ நாமம் கூறல் ஒன்றே ஆண்டவன் அருள் பெறச் செய்யும் வழி என்னும்போது, ஆண்டவனால் அருளப் பெற்ற ஐம்பொறிகளையும் ஆண்டவன் விரும்பும் வண்ணம் நல்லவைப் பார்க்க, நல்லவை கேட்க, நல்லவை நுகர, நல்லவை பேச, நல்லவை செய்யவே பயன்படுத்தும்போது மாயை என்னும் துன்பத்தைத் துறந்து பேரின்பம் பெறமுடியுமே!

வீட்டின் கண் பெண் என்பவள் அடுப்பு எனும் வேள்வியில் அறுசுவை உணவு எனும் அமுதமாக்கி அனைவருக்கும் உதவுகிறாள். தினமும் அவள் செய்யும் வேள்வி வீட்டில் அனைவரையும் பசியின்றி இருக்கச் செய்கின்றது. அதுபோல மற்றவர்க்கு உதவிடும் மனப்பான்மை யாவருக்கும் வரும்போது 'நான், எனது' என்பதைத் துறக்கச் செய்யுமே!

எந்தக் காரியத்தையும் ஆண்டவனுக்காகச் செய்கிறோம் என்ற எண்ணம் நிலையாக அமைந்தால், தீய செயல்களில், தீய எண்ணங்களில் ஈடுபாடு வராமல் துறவு என்பதின் உண்மை வெளிப்படுமே! அகங்காரத்தை, ஆசையை, தனக்கு மட்டுமே பயனாகும் பற்றைத் துறப்பதே உண்மைத் துறவு.

பாரதப்போர் 18 நாட்கள் நடந்ததாகக் கூறுவர். மனிதன் தூங்கும் நேரம் 6 மணி நேரம் நீக்கி 18 மணி நேரம் தினமும் போரில் ஈடுபட்டுள்ளான் என்பது பொய்யோ? மனப் போராட்டம் நடை பெறுகின்றது. நற்குணப்படைக்கும் துர்க்குணப் படைக்கும் நித்தமும் போர். இதில் பாண்டவர் என்பதோ ஐம்பொறிகள். கௌரவர்கள் என்பதோ வீண் ஆசைகளின் கூட்டு. இந்தப்போரில் நன்மை பெறவேண்டுமெனில் கண்ணனின் துணை வேண்டாமா? எனவே வீண் ஆசைகளின் கூட்டைத் துறக்கத் துணை இறைவன் திருநாமம் அல்லவா?

காமக் குரோத லோபங்களைத் துறக்க வேண்டும். வரம்பு மீறிய செயல்களைத் துறக்கவேண்டும். அசுர சம்பத்தைத் துறக்க வேண்டும். புலால் உண்ணல், மதுபானம், கொலை, களவு, இவற்றைத் துறக்க வேண்டும்.

பயன் கருதாமை என்னும் தொண்டுள்ளம் கொண்டு, சாத்விகம் நிறைந்து, மனத்தூய்மையுடன் பக்தியும் சிரத்தையும் கொண்டு சிறந்த செயல்கள் செய்வது, தனி மனிதனிடமும், சமூகத்திடமும் திருப்தி ஏற்படுத்தும். பிரிவினையும், துரோகமும் தூர்ந்து விடும். தனி மனிதனின் வாழ்வின் நலம் சமூகத்திற்கும் ஏற்படும். சமூகத்தின் நல்ல நிலையே தனி மனிதனுக்கும் ஆகும். ஒரு நாணயத்தின் இரு பக்கம் போன்றது தனி மனிதனும் சமூகமும். நாணயத்தின் மதிப்புப் போன்றது இறைவன் அருள்.

நான் என்பதைத் துறந்து நாம் எனக் கொள்ளவே கோயில் விழாக்கள், சமூக வாழ்வு சீர் பெற, பக்தியுடன் பண்பாடு செழிக்கச் செய்தனர் முன்னோர்கள். வேதனைகளை வேரறுக்க, சோதனைகளைத் தாங்கி சாதனை புரியவே சக்தியைப் பெற்றுள்ளோம். அச்சக்தியை மூலம் பரிணமிக்கச் செய்ய வேண்டியது மானிடப் பிறவியின் மகத்தான தொண்டு.

செயல்நிலை முதலில் கொள்ள, தூய சிறந்த நற்செயல் நிலை ஏற்படும். அதன் வழி ஞான நிலையான எல்லாம் இறைவனுக்கே என்ற உறுதி ஏற்படும் தன்மையைக் கொண்டு, இறைவன் பாதமே துணை பற்றிப் பாங்குடன் செயல்படுவோம். ★

# ஜராசந்தன்

சென்ற இதழ்த் தொடர்ச்சி..

“நன்றாகச் சொன்னாய்! குந்தி குமாரா! புகழ் பெற்ற பரத குலத்தில் பிறந்த தருமபுத்திரா! இன்னும் ஏன் தயக்கம் காட்டுகிறாய்? பீமனின் யோசனைக்கு அருச்சுனனும் சம்மதம் தெரிவித்து விட்டான். நிச்சயம் நாம் ஜெயம் பெறுவோம்! ஜராசந்தனால் பீமார்ச்சுனர்கள் கொல்லப்படுவார்களோ என்று வீணில் நீ அஞ்ச வேண்டாம். மரணம் என்பது உலகில் பிறந்த அனைவருக்கும் வரவேண்டிய ஒன்றே! யுத்தம் செய்யாமல் இருப்பதால் மட்டும் அதிலிருந்து தப்பி விட முடியுமா? தரும புத்திரா! ஜராசந்தன் அதர்மவான். அவனை தருமத்தின் வழியில் வெல்ல முடியாது. அதனால்தான் அவன் பாதையிலேயே அவனை வெல்ல முயற்சிக்கிறோம். இது தான் ராஜநீதி. நீதி சாஸ்திரங்களிலும் இதுவே சொல்லப்பட்டிருக்கிறது. உனது தயக்கத்தையும் பயத்தையும் விட்டுவிட்டு இந்த யோசனைக்கு நீ ஒப்புக்கொள்ள வேண்டும்.” என்று கூறினான் கிருஷ்ணன்.

ஜராசந்தனை வதம் செய்வது என்று எல்லோரும் தீர்மானித்தபின் தருமபுத்திரனும் இதற்கு ஒப்புக் கொண்டான். அதன் பின் பீமனும், அர்ச்சுனனும் கிருஷ்ணனும் ஜராசந்தனை வதம் செய்யப் புறப்பட்டார்கள்.

தருமபுத்திரனின் தயக்கத்துக்கும் கலக்கத்திற்கும் காரணம் ஜராசந்தனின் தேக பலமே. கிருஷ்ணனே தோற்றுப் போகும் அளவிற்கு அசுர பலம் கொண்ட ஜராசந்தனின் பிறப்பே ஓர் விநோதமானது.

சீரோடும் சிறப்போடும் வாழ்ந்த பிருகத்ரதன் பராக்கிரமசாலி என்று எல்லோராலும் போற்றப்பட்டான். மிகுந்த படை பலத்தோடு மகத நாட்டை ஆண்ட அரசன், காசி ராஜனின் இரட்டைப் பிறவிகளான இரண்டு பெண்களையும் மணந்து கொண்டவன். அதனால் அவன் அப்பெண்களிடம் “நீங்கள் இருவரும் என் இரு கண்களைப் போன்றவர்கள். உங்களில் யாருக்கும் எந்த காரணத்தைக் கொண்டும் எவ்விதத்திலும் நான் பாரபட்சமாய் நடந்துகொள்ள மாட்டேன்” என்று வாக்குறுதி கொடுத்தான்.

காலம் பல சென்றது. ஆயினும் பிருகத்ரனுக்கு புத்திரப்பேறு உண்டாகவில்லை. அவன் இளமைப் பருவத்தை கடந்து முதுமையும் அடைந்தான். பின்னர் ராஜ்ஜியத்தை மந்திரிகளிடம் ஒப்படைத்து விட்டு தன் இரு மனைவிகளுடன் தவம் செய்யக் காட்டிற்குச் சென்றான். தவம்செய்து வனத்தில் வாழ்ந்து வரும் காலத்தில் ஒருநாள், கௌதம வமிசத்தைச் சேர்ந்த சண்ட கௌசிகர் என்னும் முனிவரிடம் தன் குறையைச் சொல்லிக்கொண்டான் பிருகத்ரதன். முனிவர் இவனிடம் கருணை கொண்டு, ‘உனக்கு வேண்டியது என்ன? கேள் தருகிறேன்’ என்று கூறினார்.

“புத்திரப்பேறு இல்லாமல் நாட்டைத் துறந்து காட்டில் வாசம் செய்யும் எனக்கு என்ன தேவை இருக்கிறது?” எனச் சலிப்புடன் சொன்னான் பிருகத்ரதன்.

பிருகத்ரதனின் சலிப்பைக் கண்டு மனமிரங்கிய சண்ட கௌசிகர் தியானத்தில் ஆழ்ந்தார். அந்த முனிவரின் தவவலிமையால் அவர் மடிமீது ஒரு மாங்கனி விழுந்தது. அதைக் கையில் எடுத்துக் கொண்ட முனிவர், “பிருகத்ரதா! இந்தா......இதைப் பெற்றுக் கொள். உன் குறை தீரும்” என்று அரசனை ஆசீர்வதித்து நாட்டிற்கு அனுப்பி வைத்தார்.

“யாரிடமும் பட்சபாதமாய் நடக்க மாட்டேன்!” என்று தன் இரு மனைவிகளிடமும் பிருகத்ரதன் வாக்கு கொடுத்திருந்தானல்லவோ? அதை மீறாமல் முனிவர் கொடுத்த மாங்கனியை இரு கூறுகளாக்கி இருமனைவிகளிடமும் கொடுத்தான். அந்தப் பழத்தை உண்டபின் இரு அரசிகளும் சில நாட்களில் கர்ப்பம் தரித்தார்கள். நாட்கள் மெல்லச் சென்று உரிய காலத்தில் அரசனின் இரு மனைவிகளும் பிரசவித்தார்கள்.

குழந்தை பிறந்த பிறகும் அரசிகளின் துயரம் குறையவில்லை. மாறாக அதிக வேதனையில் ஆழ்ந்தார்கள். அதற்குக் காரணம் முனிவர் கொடுத்த கனியை பிருகத்ரதன் இருவருக்கும் பாதிப் பாதியாக கொடுத்தான் அல்லவா? அதன் விளைவாக ஒரு கண், ஒரு காது, ஒரு கை, ஒரு கால் ஆகியவற்றுடன் கூடிய பாதி உடல் ஒருத்திக்கும் மற்றொரு பாதி இன்னொருத்திக்கும் பிறந்ததுமே ஆகும். இப்படி பயங்கரமான தோற்றத்தோடு பார்க்கவே அருவருப்பூட்டும் அந்த உயிருள்ள பிண்டங்களைத் துணியில் சுற்றி எங்காவது எறிந்துவிடும்படி தாதிகளிடம் கூறினார்கள் இரண்டு அரசிகளும்.

தாதிகளும் அவ்வாறே அந்த பிண்டங்களைத் துணியில் சுற்றிக் குப்பையில் எறிந்து விட்டார்கள். இதைப் பார்த்த நரமாமிசம் தின்னும் அரக்கி ஒருத்தி ஆவலோடு அந்த பிண்டங்கள் இரண்டையும் ஒன்று சேர்த்து எடுத்தாள். அவ்வளவு தான்! அடுத்த கணத்திலேயே அந்தப் பிண்டங்கள் இரண்டும் ஒன்று சேர்ந்து

(39-ம் பக்கம் பார்க்க)

குமாரி டி. ஆர் மேகலை
செங்கல்பட்டு

# பிராணாயாம நியமம்

பூம்புகார் ஜி. சீனிவாசன் BSC..

பிராணாயாமம் முறையாக செய்து அதன் மூலம் நல்ல நிலையை அடைய நினைக்கின்றவர்கள் உத்தம ஜென்மமாயும், சாந்தம் சற்குணம் உடையவராகவும், கோபத்தை வென்றவராயும், சத்திய தர்மத்தை விரும்புகிறவராகவும், பிதா மாதாக்களை உபசரிக்கின்றவராயும், நல்லொழுக்கம் உடையவராகவும் விளங்குதல் மிகவும் முக்கியம்.

**பிராண வாயுவின் நிலை :**

மாணாக்கர் ஆரம்பத்தில் கவனிக்க வேண்டிய விதிகள் யாதெனில் சூரியன், சந்திரன், அக்னி என்றும் மூன்று நாடிகளின் நடைகளெனப்படும் மூன்று கலையின் சுவாசத்தினால் உண்டாகும் சப்தத்தைக் கண்டறிய வேண்டும். அச் சப்தத்திற்கு அஜபா என்று பெயர். அதனை கண்டுபிடிக்க சில வழிகள் உள்ளன. அவையாவன : வாயுக்களில் மூன்று வகைப்படும். 1. இடகலை, 2. பிங்கலை, 3. சுழுமுனை. இதில் இடகலை என்பது இடது நாசியிலும், பிங்கலை என்பது வலது நாசியிலும் சுழுமுனை என்பது இரண்டு நாசியிலும் வரவும் போகவும் இருக்கின்ற சுவாசம். இடகலை என்பது சந்திரனும், பிங்கலை என்பது சூரியனும், சுழுமுனை என்பது அக்னியும் எனப்படும்.

மனிதர்களுக்குச் சாதாரணமாக எழுபத்தி ஆறாயிரம் நாடி நரம்புகள் இருக்கின்றன. அவைகளில் முக்கியமானவை இருபத்தி நான்கு. இவைகள் குண்டலினி சக்தி என்று சொல்லப்படும். இச் சக்தியானது பாம்பைப்போல் சுற்றிக்கொண்டு சுவாதி ஸ்தானத்திற்கு மேலாகவும், மணி பூரகத்திற்கு கீழாகவும் இருக்கின்றது. இந்த 24 நாடிகளில் மூன்று நாடிகளை முக்கியமாகக் கொண்டுள்ளோம். அதாவது இடகலையானது தேகத்தின் இடது பாகத்திலும், பிங்கலையானது தேகத்தின் வலது பாகத்திலும், சுழுமுனையானது தேகத்தின் மத்தியிலும் இருக்கின்றன.

**ஆசன விதிகள் :**

பத்மம், வீமம், கோமுகம், குக்குடம் ஆகிய நான்கும் ஞான சாதகனுக்குரிய ஆசனமாகும். இதில் பத்மாசனமானது இரண்டு தொடைகளில் இரண்டு பாதங்களையும் வைத்து உட்காருதல். இது சகல பாபங்களையும் நாசம் செய்வதாகும். மான்தோல், புலித்தோல், வெண்துகில், தர்ப்பை இவைகளின் மேல் இருந்து செய்ய வேண்டும். இடை, வயிறு, கண்டம், தலை சமனமாய் ஸ்தம்பத்தைப் போல் நிமிர்ந்து இருக்க வேண்டும். கிரஹஸ்தர்களுக்கு பத்மாசனம், சன்னியாசிகளுக்கு சித்தாசனம் உகந்தது. ஆத்ம ஞானகுரு வடமுகம் பார்த்து இருப்பதால் அவர்கள் சன்னதிக்கு நேர் எதிரே தெற்கு முகம் பார்த்து உட்கார்ந்து பிராணாயாமம் செய்ய வேண்டியது.

**பிராணாயாமம் :**

இந்த யோகத்திற்குரிய ஏகாந்த ஸ்தானத்தில் பத்மாசனம் இட்டு உடனே அஷ்ட கந்த தூபம் போட வேண்டியது. இந்த யோகத்திற்கு ஏற்படுத்திய அறையானது மிக சுத்தமாக இருக்க வேண்டும். இதில் சொல்லிய நான்கு காலங்களில் எந்த காலமாவது கவிழ்த்துக் கொண்டு அப்பியாசப்படுத்தப்பட வேண்டும்.

பிராணாயாமம் என்பதில் வாயுவை உட்கொள்ளுவது பூரகமாம். அவ்வாயுவை நிறுத்துதல் கும்பகமாகும். கும்பித்த வாயுவை வெளிப்படுத்துதல் இரேசகம் எனப்படும்.

**நாடி சுத்தி :**

பிங்கலையால் வாயுவை பூரித்து வாயுவை இடகலையால் ரேசிக்க வேண்டும். இவ்வண்ணம் சந்திரனால் பூரித்து சூரியனால் ரேசிக்க வேண்டும்.

சூரியனால் பூரித்து சந்திரனால் ரேசிக்க வேண்டும். இவ்விதம் சூரியசந்திர நாடிகளின் அப்பியாசத்தை தினம் விஸ்தரிக்கப்பட வேண்டும். இதனால் நாடிகள் மூன்று மாதத்திற்கு மேல் சுத்தமாகிறது. அதன் பிறகு பிராணாயாமம் செய்ய ஆரம்பிக்கலாம்.

இடகலையானது எப்போதும் வலது நாசியிலும் அம்சம் எனவே இருக்கும். அம்சம் என்பது ஆத்மாவின் பெயராகும். முதல் வெளியே வருகிற சுவாசத்தின் சத்தமாகிய "ஹம்" என்பதையும் உள்ளே போகிற சுவாசத்தின் சத்தமாகிய "ஸம்" என்பதையும் கண்டறிய வேண்டும். இந்த "ஹம்ஸம்" என்கிற சப்தத்தை கண்டறிந்தவன் இந்த அப்பியாஸத்தில் முதல்படி தெரிந்தவன்.

பிராணாயாமத்தின் பிரமாணத்தை உணர்த்துதல் அதாவது அருணோதயம் முதல் மூன்று நாழிகை வரையிலும், மத்தியானம் தியானத்திலும் அஸ்தமிப்பதற்கு முன்னும் பின்னுமாக இரண்டு முகூர்த்தமும் அர்த்த ராத்திரியிலும் பிரதி தினம் நான்கு முறை செய்ய வேண்டும். காலம் ஒன்றுக்கு 80 பிராணாயாமம் வரையிலும் நன்றாய் அப்பியசிக்க வேண்டும். முகூர்த்தம் என்பது இரண்டு நாழிகை அளவுள்ளதாம்.

நான்கு முறை செய்தால் தினந்தோறும் பிராணுயாமம் பலனை அடையலாம். ஒரு புருஷன் அப்பியசிக்க வேண்டுமானுல் காலையில் 50ம் மத்தியானத்தில் 40ம் சாயங்காலத்திலும் அர்த்த ராத்திரியிலும் 20 வீதமும் ஆக மெள்ள மெள்ள செய்ய வேண்டியது. அது கைவல்யப்படும் போது முதலில் வியர்வையும் இரண்டாவது நடுக்கமும் மூன்றுவது தவளை கத்தும் குணமும் உண்டாகும். பூமியின்று ஆகாயம் திரும்புதலும் உண்டாகும். இப்பிராணுயாமம் கிரகஸ்தர்களுக்கு சுத்தியின் பொருட்டும் யோகிகளுக்கு யோக சித்தியின் பொருட்டுமாம்.

இந்த யோகம் அப்பியசிப்பவர்கள் ஜீரண சக்தியை உணர்ந்து தேகத்தை பலப்படுத்த வேண்டும். அதாவது அரிசி, கோதுமை,பச்சைப் பயிறு, துவரை, உளுந்து, கம்பு, கேழ்வரகு, நெய், பால், தயிர், மோர் முதலியவை உபயோகிக்க வேண்டும். இந்த யோகி அரை வயிறு அன்னமும், கால் வயிறு தண்ணீரும் சாப்பிட வேண்டும். ஏனெனில் உள் வாயு ஒரு பாகத்தில் சஞ்சரிக்க வேண்டும் என்று உணர்க. புளிப்பு, இனிப்பு, உவர்ப்பு, கார்ப்பு இவைகளை அதிகமாக சேர்க்கக் கூடாது. எல்லா கிரஹஸ்தர்களும் ஏழைகளும் ஜாதி பேத நிற வித்தியாசம் பார்க்க வேண்டியதில்லை. திரிகரணசுத்திமாக யார் இந்த யோகத்தை செய்வார்களோ அவர்களுக்கு சித்திக்கும் ஏன்பது நிச்சயம்.ஒருவன் 18 வயதில் அந்த கேசரி முத்திரையை அடைவான். இத்தன்மையான யோகி மாமிசங்களை கண்டிப்பாய் நீக்க வேண்டும்.

பிராணுயாமம் ரேசக, பூரக, கும்பக மாத்திரைகள் என்றும் பிராணன் என்பது தன் தேகத்தில் ஜீவித்திருக்கும் வாயுவென்றும் ஆஸமம் என்பது அந்த வாயுவை தடுப்பதென்றும் பொருள். மற்றும் ரேசக, பூரக, கும்பக பேதத்தால் மூன்று விதமாயும் மூன்று வர்ணமாயும் இருப்பதால் பிரணவமே பிராணுயாமம் எனப்படும். பூரித்து, அகாரத்தை சிந்தித்துப் பூரித்த வாயுவை 64 மாத்திரையளவு கும்பித்து உகாரத்தையே தியானித்துக் கும்பித்ததைப் பிங்கலையில் 32 மாத்திரையளவு ரேசித்து மகரமூர்த்தியைத் தியானிக்க வேண்டும். அன்றியும் பூரகம் 12 ஓங்காரமாகவும் ரேசகம் 10 ஓங்காரமாகவும் கும்பகம் 16 ஓங்காரமாகவும் செய்ய வேண்டும். இது பிராணுயாம அப்பியாஸம். பிரும்மா, விஷ்ணு, ருத்திரர் ஆகியோர் பூரக, கும்பக, ரேசகங்களுக்கு அதி தேவதைகள்.

இந்த மனுஷ ஜென்மத்திற்கு சாதகமாய் சுவாசம் போகிறது உள்ளே 10 அங்குலம், வெளியில் 12 அங்குலம் அதுவல்லாமல் நடக்கும்போது 24 அங்குலமும் ஓடும்போது 42 அங்குலமும் யோகம் செய்யும்போதும் தூங்கும்போதும் 50—60 அங்குலமும் போகும். சாப்பிடும்போதும் வாந்தியாகும்போதும் 18 அங்குலமும் ஓடுகிறது. ஆகையால் இந்த சுவாசத்தை அப்பியாசிகள் கவனிக்க வேண்டியது. இவ்வளவு நீளமாக போகிற சுவாசத்தை தன்னுல் கூடிய அளவு கொஞ்சம் கொஞ்சமாய் குறைக்க வேண்டியது. அது ஏனென்றுல் இந்த மனித ஜென்மத்திற்கு கலைகளாகிய சுவாசம் 12 அங்குலம் ஓடி 4 அங்குலம் கழித்து 8 அங்குலம்தான் நின்ற இடத்தில் நோக்கும். இப்படிக்கு சாதாரணமாக 4 அங்குலம் கழிந்ததானுல் 120 வயது ஆகிறது. கொஞ்சம் கொஞ்சமாய் சுவாசத்தை பந்தனம் பண்ணுவதினுல் நீண்ட ஆயுளை உடையவர்களாக இருப்பார்கள்.

யோகிகளுக்கு மரணம் நேரிடுவது கஷ்டம். யோகிகள் அப்பியசத்தால் வாயுக்களையும், தத்துவங்களையும் உணர்ந்து முத்திரைக்குப் பின் தொடர்வார்கள். பிறகு கேசரி முத்திரை எவ்வளவு காலம் ஜீவித்திருக்க வேண்டுமோ அவ்வளவு காலம் ஜீவித்திருப்பார்கள். சாதாரணமாய் மனிதர்களுக்கு 21,600 சுவாசம் நடக்கும்போது 120 வயது வரை ஜீவித்திருக்கலாம். இப்போது மனிதர்கள் 61,600 சுவாசத்திற்கு மேல் விடுகிறுர்கள். எப்படியெனில் நடப்பதினுலும், தூங்குவதினுலும், போகம் செய்வதினுலும் 120 வயதுக்குக் குறைவு ஏற்படுகிறது.

இந்த யோக அப்பியாசிகள் சூரிய சந்திர கலையில் பிராண வாயு செல்லுங்கால் பிருதிவி—அப்பு—தேயு—வாயு என்ற நான்கு தத்துவங்கள் வந்து விலகும். அப்போது பிராண வாயு ஆகாய தத்துவத்தில் அடையும். அச்சமயம் சுவாசம் குறைந்து விடும். அக்காலத்து, சுவாச பந்தனம் செய்யக்கூடும்.

அப்போது

1 அங்குலம் குறைந்தால் இவ் உலகத்து இச்சையில் நின்று சுவாதீனப்படுவான்.

2 அங்குலம் குறைந்தால் மனம் ஆனந்திக்கப்பட்டு ஞானச் செல்வம் உண்டாகும்.

3 அங்குலம் குறைந்தால் விதேகியாவான்.

4, 5 அங்குலம் குறைந்தால் தூர தேசத்தில் நடக்கும் நடவடிக்கைகளைச் சொல்வான்.

6 அங்குலம் குறைந்தால் ஆகாயத்தில் உள்ள சகலமும் கண்டு உணர்வான்.

7 அங்குலம் குறைந்தால் சரீரம் காய சித்தி பெறும்.

8 அங்குலம் குறைந்தால் அனிமா சித்திகளையடைவான்.

9 அங்குலம் குறைந்தால் நவ கண்டங்களில் சஞ்சரிப்பான்.

10 அங்குலம் குறைந்தால் ஒரு தேகத்தை விட்டு மற்றொரு தேகத்தில் பிரவேசிப்பான்.

11 அங்குலம் குறைந்தால் தனது ஆத்மாவை கண்டு வசனிப்பான்.

12 அங்குலம் குறைந்தால் உதித்த இடத்திலேயே சுழன்று கொண்டிருக்கிறபடியால் அந்த பரம யோகி அன்னபானுதிகளை நீக்கி அவா சுற்றிருப்பான். யோகிகளுக்கு வயதே கிடையாது.

***நூல் உதவி: ஸ்ரீ கதிர்காம ஸ்வாமிகள் சரித்திரம்.***

*

# கூரத்தாழ்வான்

ஆழ்வார்கள் அனைவரும் பகவானை ஆழ்ந்து, பகவானின் கல்யாண குணங்களை ஆழ்ந்து பாடியும், அதிலேயே லயித்தும் இருந்தனர். எம்பெருமான் பால் தீராக் காதல் கொண்டு ஆழ்ந்து பாடியதனுலேயே ஆழ்வார்கள் எனப் பட்டனர். ஆனல் பாடாமலேயே அப்பரந்தாமனை ஆழமாகத் துதித்திருந்தமையினலே 'ஆழ்வான்' என செல்லமாக ஒருமையிலே அழைக்கப்பட்டவர், அதுவும் வசிஷ்டர் வாயாலே பிரம்ம ரிஷி என்று போற்றப்பட்டதைப் போல் எம்பெருமான் ராமானுஜர் திருவாயாலே அழைக்கப்பட்டவர் ஒருவர் உண்டென்ருல் அது கூரத்தாழ்வானேயன்றி வேறுயாருமிலர் என்று உறுதியிட்டும் அறுதியிட்டும் சொல்லலாம்.

திரு. கே. ஆர். ஜெயவேலு,
சேலம்.

கூரத்தாழ்வானின் பெருமையினைப் பற்றி சிறுமதியினனுன அடியேனுக்குத் தகுதிகள் இல்லாவிடினும் அவனின் பெருமைகளை ஏட்டில் காண்கின்ற பொழுது இன்றல்லாவிடினும் பின்னுட்களிலாவது நாம் அவனைப்போல செல்வத்தில் இல்லாவிடினும் நைச்சிய, தியாகச் சுடராய் விளங்க வேண்டும் என்ற ஒரு தணியாத தாகத்தினுலே இதனை எழுதுகின்ருேம்.

கூரத்தாழ்வான் செல்வத்திலே குறைந்தவர் அல்லர். பண்பிலே பத்தரை மாற்றுத் தங்கம். குணத்திலே குன்று. அத்தகு பண்பாளரின் நகர நிர்வாகத் திறனுக்கோர் எடுத்துக் காட்டு இதோ:

ஒரு நாள் இரவில் நகர சோதனை செய்து வந்தார். அதுபோது ஒரு இல்லத்தில் நடுநிசியில் பேச்சரவம் கேட்டது. அதனை ஒற்றுக் கேட்ட ஆழ்வான் உள்ளே வயதான தம்பதிகள் தங்கள் பெண்ணின் திருமண விஷயமாக உரையாடியதைக் கேட்டார். அவ்வொற்றில், பெண்ணுக்கு தோஷம் இருப்பதால் மணந்தவன் தீண்டினுல் அன்றேஅவன் இறப்பான். அதனுல் மணம் செய்ய முடியாமல் மனம் நொந்து கலங்குவது தெரிய வந்தது.

மறுநாள் காலையில் ஆழ்வான் பெண் கேட்டு சீர்வரிசைகளை அப்பெண் வீட்டுக்கு அனுப்பி வைத்தார். இதைப் பார்த்து அதிர்ச்சியடைந்த அத்தம்பதிகள் ஆழ்வானிடம் தங்கள் பெண்ணின் தோஷ நிலையைத் தெரிவித்து மணம் செய்து தர மறுத்தனர். ஆழ்வான், "தெரிந்துதான் மணம் செய்து கொள்கிறேன். நீங்கள் அஞ்ச வேண்டாம்". என்று கூறி மணம் புரிந்து தொடாமலேயே தம்பதிகளாக வாழ்ந்து வந்தார். இதிலே நாம் காண வேண்டியது என்னவென்ருல் ஒரு நகர நிர்வாகி நகர சோதனையில் வருகின்ற பொழுது குடிமக்களின் துயரினைச் செவியுற்றுத்தன்னுலியன்ற தனைச் செய்ய முன்வருவதோடு மட்டுமல்லாமல் தனது குடிமக்களுக்காக இளமையிலேயே இந்திரியத்தை அடக்கி ஆளும் ஒரு உத்தம புருஷராக காட்சியளிப்பதே.

அடுத்தது அவரது செல்வச் சிறப்பிற்கு ஓர் எடுத்துக் காட்டு இவண் காண்போம்:

காஞ்சி நகர் தேவப் பெருமாளே வியந்தளவிற்கு இருந்ததாம் இவரது செல்வம். இரப்போர்க்கு இல்லையெனுது வாரி வழங்கும் வள்ளலாக வாழ்ந்து வருகின்ற காலத்தில் இவரது மாளிகையின் நெடுங்கதவை வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுத்து அடைக்கும்போது இரவு நெடு நேரமாயிற்று. அப்படி அடைக்கும் போது கதவின் மணியோசை நெடுந்தூரம் கேட்கும். அச்சமயம் காஞ்சியில் சந்நிதியில் பேரருளாளனும் பெருந்தேவித் தாயாரும் தனியாக உரையாடிக் கொண்டிருக்கையில் கூரத்துக் கதவின் மணியோசை கேட்டு, எம்பெருமாள் திருக்கச்சி நம்பிகளிடம் இதன் காரணம் வினவ, அவரும் "கூரத்து ஆழ்வானுடைய நெடுங்கதவு வறியவர்களுக்கு வழங்குதல் இப்போதுதான் முடிந்து அடைக்கப்படுகிறது. அதன் ஓசைதான் இது" என்று பதிலளித்தார்.

பின்னுளில் இதனை உணர்ந்த ஆழ்வான், "பெருமாளே மயங்கின செல்வம் நமக்கு வேண்டாம்", என்று எல்லாவற்றையும் தானம் செய்து விட்டு ஸ்ரீராமானுஜரை ஆச்ரயித்து அவருடைய பிரதான சிஷ்யராய் போற்றிப் பெற்று வாழ்ந்து வந்தார். அளவற்ற செல்வம் அவரிடமிருந்தும் அரங்கத்து அரவணை அரங்கன் பால் மையல் கொண்டு அடியார்க்கு அடியாராகிய அவரது ஆழ்ந்த பக்தியுணர்வினை நாம் எங்ஙனம் சொல்லி இன்புறுவது.

கூரத்தாழ்வானுடைய நைச்சிய பாவத்திற்கு ஒரு எடுத்துக்காட்டு: வியாசர் அருளிய ப்ரஹ்ம ஸூத்ரங்களுக்குப் பாஷ்ய உரை செய்யத் தொடங்கிய உடையவர் ஆழ்வானைப் பார்த்து, "நான் சொல்வதை எழுதிக் கொண்டு வாரும், நும் மனதிற்கிசையவில்லையானுல் நிறுத்தும்" என்று சொல்லிவைத்து, உரை சொல்லிக் கொண்டு வர ஆழ்வான் எழுதிக் கொண்டு வந்தார்.

ஆத்ம விஷயம் வந்தபோது, "ஞானத்தோடும் ஆனந்தத்தோடும்

கூடியவன் ஆத்மா'' என்று பரமாத்மாவோடு ஒத்திருக்கும்படி உரை சொல்ல, அது ஒவ்வாமையாலே ஆழ்வான் எழுதாமல் நிறுத்தினர். அது கண்டு எம்பெருமானுர் கோபத்தோடு ஆழ்வானைத் தள்ளிவிட்டார்.

ஆழ்வானை மற்றவர்கள், 'இப்படிச் செய்தாரே! இப்போது நீர் என்ன நினைக்கிறீர்?' என்று கேட்க 'சொத்துக்குரியவன் சொத்தை எப்படியும் செய்வான், சொத்துக்கு அதிலே ஒரு சுதந்திரமுமில்லை. அவன் இஷ்டப்படி யிருக்கையே நிலை.' என்று பதில் கூறினர். பிறகு எம்பெருமானுர் நன்கு யோசித்து ஆழ்வானை அழைத்துத் தம் செயலுக்கு வருந்தினர்.

செல்வச் சிறப்புற்ற கூரத்தாழ்வான் ஆசாரியாரின் செயலுக்குக் கோபமுருமல், அவரது செயலுக்கு அவர் கூறிய விளக்கத்தினைப் படிக்கும்பொழுது நிச்சயம் அனைவரது கருத்தைக் கவரும்.

இவை அனைத்துக்கும் சிகரம் வைத்தாற் போல் அவரது தியாகத்தினை இவண் எழுதாமல் விட்டால் நாம் பாபியாவோம். வைஷ்ணவ உலகத்திற்காகத் தன் கண்ணையே கொடுத்த ஓர் உத்தம சீலர், குணக்குன்று, தெய்வச்சுடர்தான் கூரத்தாழ்வான். அந்நிகழ்ச்சியினை ஈண்டுக் காண்போம்.

பதினேராம் நூற்றுண்டில் குலோத்துங்கச்சோழன் என்பவன் ஆட்சியில் இருந்தான். இவன் சைவத்தின்பால் பற்று மிகக் கொண்டதனுலேயே, 'சிவனைக் காட்டிலும் மேலான தெய்வமில்லை' எனக் கருதி எல்லா வித்வான்களுக்கும் வேண்டுவன தந்தும், பயமுறுத்தியும், நயந்தும், நிர்பந்தப்படுத்தியும் அனைவரையும் வருத்தினுன்.

இதனைக் கண்ட நாலூரான் என்னும் வைஷ்ணவன் அரசனின் ஆணவத்தின் விளைவை சிறிதும் உணராமல் 'விஷ்ணுவே பரத்துவம்' என்பதை உணரச் செய்ய வேண்டும் என்ற நோக்கில், 'இராமநுஜர் கையெழுத்திட்டால் அனைவரும் மதம் மாறிடுவர்' என்று கூறிய உடனே அரசன் இராமாநுஜரை அழைத்து வர ஆள் அனுப்பினுன். அரசனின் ஆட்கள் வந்ததை அறிந்த கூரத்தாழ்வான் ராமாநுஜருக்கு ஏதும் தீங்கு நேரக் கூடாது என்று கருதி அவரின் காஷாய த்ரி தண்டங்களைத் தரித்துக் கொண்டு ஆவ்ஆட்களுடனே புறப்பட்டார். இதனை உணர்ந்த பெரிய நம்பிகளும் ஆழ்வானுக்கென்ன வருமோ என்று துணையாகத் தம் மகளான அத்துழாயுடன் புறப்பட்டார். பின்னர் நடந்ததை அறிந்த உடையவர் வேதனைப்பட்டார்.

கூரத்தாழ்வானும், பெரிய நம்பிகளும் அரசவையை அடைந்ததும் அரசன், 'சிவாத் பரதாம் நாஸ்தி' என்ற ஓலையில் கையெழுத்திடச் சொன்னுன். அதற்கு கூரத்தாழ்வான், 'ஒருவன் உலகளந்தான், அவன் திருவடிகளை ஒருவன் கழுவினுன், அந்த தீர்த்தத்தை மற்ருெருவன் தன் தலையில் தாங்கிப் புனிதனுனன். இதனுல் யார் சிறந்தவர் என்பதை நீயே உணர்ந்து பார்!' என்று பலபடியாக ஸ்ரீமந் நாராயணனே பரம்பொருள் என்று அறுதியிட்டு கூறினுன்.

'நீர் வித்வான் பலபடிப் பேச வல்லவர். இதில் நீர் கையெழுத்திடும்' என்று ஆணையிட்டான். உடனே ஆழ்வான் 'த்ரோண மஸ்தி தத: பரம்'(சிவன் என்பதற்குப் படி என்று ஒரு பொருள். அதனுல் 'அதைக் காட்டிலும் பெரியது பதக்கு') என்று எழுதி கையெழுத்திட்டார்.

அரசன் இந்த நையாண்டியை உணர்ந்து கோபங் கொண்டான். உடன் சென்ற பெரிய நம்பிகளும் கையெழுத்திட மறுக்கவே கோபமுற்ற அரசன் இருவரின் கண்களை பிடுங்கும்படித் தன் ஆட்களுக்குப் பணித்தான். உடனே கூரத்தாழ்வான் துஷ்டனை உன்னைக் கண்ட கண்கள் உதவாது என்று கூறித் தம் நகங்களாலேயே கண்களைப் பிடுங்கி அவன்மேல் வீசினுர். அக்கண்கள் புழுவாக மாறின. இதனுலேயே அச்சோழனுக்கு புழுகண்ட (கிருமி) சோழன் எனப் பெயராகியது.

தம் ஆசாரியனுக்கு முன்னுலேயே பரமபதித்து அங்கு அவரை எதிர்கொள்ள வேண்டும் என்ற ஒரு அவாவினைக் கொண்ட சீடரைப் பெற்ற ராமாநுஜர் அடைந்த சிறப்பே, சிறப்பு.

கூரத்தாழ்வானை சீடராகப் பெற்றதால் எம்பெருமானுக்கு மேலும் புகழ் கிட்டியது மட்டுமல்லாமல் ஆழ்வானது ஸம்பந்தமுடையார்க்கும் பரமபதம் என்று பெருமான் அருளியதைக் கேட்டு எம்பெருமானுர் கூரத்தாழ்வானின் சகவாசத்தால் தமக்கும் பரமபதம் உறுதி என்று நினைந்து மகிழ்ந்தார்.

திரிகரண சுத்தியோடு பல தியாகங்களைப் புரிந்த கூரத்தாழ்வான் வைஷ்ணவத்திற்குத் தனது உடல், பொருள், மக்கள் ஆகியவற்றை அர்ப்பணித்த ஒரு தியாகச் சுடர். கூரத்தாழ்வானின் தியாகமும், நைச்சியமும் பிற்கால சந்ததியினருக்கு ஒரு மாபெரும் எடுத்துக் காட்டாகும்.

---

வருங்காலத்தில் மற்ற தர்மங்களைப் போல் ஸ்த்ரீ தர்மமும் நாசமாகி விடுமென்பது போகும் போக்கைப் பார்த்தாலே தெரிகிறது. ஸ்த்ரீ தர்மம் அழிந்து போய்விட்டால், கற்பை இழந்து ஆடுமாடுகளைப் போல் வாழ நேரிடும். ஒருக்கால் அயல்நாடுகளில் இருப்பது போல் ஆண் பெண் விவஸ்தையின்றிப் பழகுவதையே நாகரீகம் என்று இந்தியாவும் ஏற்றுக்கொள்ளுமாகில் இந்தியாவிற்கு அனர்த்தம்தான் கிட்டும்.

ஆதாரம் : பாகவத தர்மம்



# மாமனெனும் மாமாயன்

பாண்டவர்களுக்கு மாமனாய் வந்தவன், மாமாயன் கண்ணன். கௌரவர்களுக்கும் அவனே மாமன் உறவுக்கு உரியவன். ஆயினும் அவர்கள் சகுனியையே தமக்குத் துணையாகக் கொண்டு, அம்மாமன் காட்டிய வழியிலேயே நடந்தனர். பாண்டவர்களின் மாமனோ அன்பிற்கு ஆட்பட்டு தர்மவான்களான அவர்களுக்கு அவன் புரிந்த மாயச் செயல்கள் பலப்பல.

அவன் பார்த்தனின் சாரதியாய் நின்று போர்க்களத்தில் செய்த மாயங்களும் எண்ணில. இதனைத் தம் திருவாய்மொழியில் அமைத்துப் பாடுவார் நம்மாழ்வார்.

“ மாய மறிபவர் மாயவற் காளன்றி
யாவரோ?
தாயம் செறும் ஒரு நூற்றுவர் மங்க
ஓரைவர்க்காய்
தேசமறிய ஓர்சாரதியாய்ச் சென்று
சேனையை
நாசம் செய்திட்டு நடந்த நல்வார்த்தை
அறிந்துமே!”

—திருவாய்மொழி [7-5-9]

அவன் செய்த மாயங்கள் அறிபவர் யார்? இத்தகைய மாயங்களை அவன் செய்யக் காரணம் என்ன? பாரதப்போரின் மூலம் பூமியின் பாரம் தீர்க்கப்பட வேண்டுமென்றே அவதாரம் புரிந்தவன் ஸ்ரீகிருஷ்ணன். வில்லிபுத்தூரார் தம்முடைய பாரதத்தில், கண்ணனுடைய அவதாரம் பற்றிப் பேசும் போது மூன்று இடங்களில் பூபாரம் தீர்க்கப் பிறந்தவன் என்றே கூறுகின்றார்.

கண்ணன் இத்தகைய மாமாயங்கள் புரிந்து, பாண்டவர்கட்குத் துணையாய் நின்றது பூபாரம் தீர்க்கவா? அன்றி அன்பிற்கு ஆட்பட்டு நியாயத்தின் பக்கம் நிற்கவா?

பாரதப்போர் நிகழக் காரணமாய் இருந்தது சூதாட்டமே. அச்சூதாட்டம் இல்லையெனில் பாரதப்போரே நிகழ்ந்திருக்க முடியாது. பாண்டவர்களுக்கென்று ஆரம்பம் முதலே பேருதவி புரிந்தவன் கண்ணன். அக்கண்ணன் எண்ணிஇருந்தால் சூதாட்டமே நிகழாமல் தடுத்திருக்கலாம் அல்லவா?

ஆயின் கண்ணன் அவ்வாறு செய்யவில்லை. அதற்குக் காரணம் பூபாரம் தீர்க்கப் பிறந்தவன், அதற்கு வேண்டிய நிகழ்ச்சிகளின் ஆயத்தம் நடந்து கொண்டிருக்கும்போது தடுக்க வேண்டாம் என்று விட்டு விட்டானு? ஆராய்ந்து பார்க்க வேண்டிய ஒன்று.

கண்ணனின் பிறப்பை வில்லிப் புத்தூரார் தம் நூலில் பல இடங்களில் பேசினும், அவனுடைய அவதார நோக்கமான பூபாரம் தீர்க்கப் பிறந்தமையை மூன்று இடங்களில் மட்டுமே கூறுகின்றார். அதுவும் இன்றியமையாத இடங்களில் மட்டுமே பேசுகின்றார்.


**திரு. வ. ஜோதி, எம்.ஏ., பி.எட்.**
**புதுப்பேட்டை.**


வில்லி தம் நூலில் முதன் முதலில் கண்ணனைப் பற்றிக் குறிப்பிடும் போது இக்கருத்தை அமைத்துப் பாடுவார்.

பாண்டவர்களின் அவதாரத்திற்குப் பின்னர் பாண்டு மறைந்து விடுகின்றார். உறவினர்கள் வருந்துகின்றனர். அவ்வருத்தத்தின் போது உறவு முறையினர் சென்று காணுகின்ற மரபின்படி கிருஷ்ணனைப்

பெற்றெடுத்த வாசுதேவனும்,தேவகியும் அவனுடைய அண்ணனுன பலராமனும் வருகின்றனர். இவர்களுடன் கிருஷ்ணனும்அத்தினுபுரிக்கு வருகின்றுன்.

அப்போது வசுதேவரைப் பற்றிக் குறிப்பிடும் போது வில்லியார் இவ்வாறு கூறுகின்றுர். "அலை வீசுகின்ற கடலை உடையாகவும், மின்னலை இடையாகவும், மலையைக் கொங்கையாகவும் உடைய பொன்னென்று எண்ணத்தக்க நிறத்திஞேடு தன் அழகும் அழிந்ததினுல் துன்பமடைந்தவளான பூமாதேவியினுடைய பூபாரம் தீர்க்க வேண்டுமென்ற கருத்துடன் அவதரித்த தலைவனுன கிருஷ்ணனைப் பெற்றெடுத்தவரான வசுதேவர் வந்தார்'' என்று குறிப்பிடுவார்.

இதனை,

" இன்னணம் வளரும் காலை
 எறிகடல் உடுத்த அல்குல்
மின்னெனும் மருங்குல் கொங்கை
 வேற்புடை வேய்கொள் மென்
 தோள்
பொன்னெனும் நிறத்திஞேடும்
 பொற்பழி யாகு லத்தாள்
தன்னென முடிப்பான் வந்த
 தலைவனைத் தந்த கோமான்''
 [வில்லி—சம்பவச் சுருக்கம்-III]

இவ்வாறு பூபாரம் தீர்க்கப் பிறந்தவன் கண்ணபிரான் என்று இன்னும் இரண்டு இடங்களில் குறிப்பிடுகின்றுர். கிருஷ்ணன் தூது சருக்கத்தில் சகாதேவன் கூற்ருக அமைத்துப் பாடுகின்றுர். "நீ பாரத அமரில் யாவரையும் நீருக்கிப் பூபாரம் தீர்க்கப் புரிந்தாய் புயல்வண்ணு'' (கிருஷ்ணன் தூது சருக்கம்-34) என்று நூலின் இடையில் கூறுவார். முக்காலமும் உணர்ந்தவனுன சகாதேவன் இதைத் தன் ஞானத்தால் உணர்ந்து கூறுகிறுன்.

பாரதப் போரின் முடிவில் இதே கருத்தை இடத்திற்கு ஏற்ப அமைப்பார் ஆசிரியர். பூமாதேவியின் வேண்டுகோளும், தேவர்களின் பிரார்த்தனையும் தன்னுடைய சங்கல்பமும் தவருமல் பூமிக்குப் பாரமாய் நின்ற கொடியவர்கள் ஒருவரும் தப்பிக்காமல் புவியின் பாரத்தைத் தீர்த்தவன் என்பார். "தப்பாமல் நிலமடந்தை தன்பாரம் அகற்றுவித்த சாரங்கபாணி'' [சௌப்திக-30] என்பது அதற்குரிய பாடல்வரி.

இவ்வாறு நூலில் மூன்று முக்கியமான இடங்களில் பூமியின் பாரத்தைத் தீர்க்கவே அவதாரம் புரிந்த அவன் அதற்காகவே பாரதப்போருக்குக் காரணமாய் அமைந்தாஞ? அதற்காகவே பாண்டவர்க்கு உதவி புரிந்தாஞ? அல்லது தருமவான்களுக்குத் துணை நின்றுஞ?

உண்மையில் பாரதப்போர் நிகழ்ச்சி சூதாட்டத்தில்தான் துவங்குகிறது எனலாம். அச்சூதாட்டத்திற்கு முதலில் தருமன் ஒப்புக்கொள்ளாவிடினும் முடிவில் அதற்கு இணங்குகிறுன். முதற்சூதில் பாண்டவர்களுக்கு வெற்றி கிட்டவில்லை. அனைத்தையும் தோற்கின்றனர்.

அவர்கள் அனைத்தையும் தோற்று நின்றதைப் பாடும் வில்லியார் தம் கூற்ருக அவலம் தோன்றப் பாட வேண்டிய கருத்தைச் சபையில் உள்ளோர் கூற்ருக ஏற்றிப் பாடுகின்றுர். இங்கு வில்லியின் துயரைச் சபையில் உள்ளோர் துயராகக் கொள்ள வேண்டும்.

முரசுக் கொடியை உயர எடுத்தவனுன தருமபுத்திரன் வைத்த பொருள்கள் அனைத்தையும் இழந்து உரிய பொருள் ஏதும் இல்லாமல் இருந்த சமயத்தில் அவ்வரச சபையில் இருந்தவர்கள் அத்தருமபுத்திரன் மேலுள்ள இரக்கத்திஞல் தாம் அணிந்துள்ள வாசனை பொருந்திய மாலைகள் வாடி விழும்படியும் உடல் நடுங்கி, மனம் தவித்து மிகவும் வருந்திஞர்கள்.

" முரசினை உயர்த்த கோமான்
 மொழிந்தன முழுதும் தோற்றுப்
பரவுவ தொன்று மில்லாப்
 பான்மையோடு இருந்த காலை
விரைசெறி அலங்கல் சோர
 மெய்குலைந்து உள்ளம் வெம்பி
அரசவை யிருந்தோர் தம்மில்
 அருளிஞல் அழிந்து நொந்தார்''
 [வில்லி-சூதுபோர்-190]

இவை போன்று இன்னும் பல பாடல்களில் தம் துயரை வெளிப்படுத்திப் பாடுவார். இப்படிப்பட்ட நிகழ்ச்சியே ஏற்படாமல் கண்ணன் முதற்சூதிலேயே செய்திருக்கலாம். இச்சூதில் மிகவும் நல்லவர்களான பாண்டவர்கள் வெற்றி பெற்றிருப்பின் பாரதப் போரே நிகழாமல் போய் இருக்கும். ஆயின் அவர்கள் வெற்றி பெறவில்லை. கண்ணனும் இச்சூதில் உதவவில்லை.

மறு சூதில் பாண்டவர்கள் வெற்றி பெறுகின்றனர். அவ்வாறு அவன்

## விண்ணப்பம்

தி. தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரா கோயிலில் நடைபெறும் ஆர்ஜித சேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத் தொகையினை தேசியமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராஃப்ட்' (D. D) அல்லது 'பேயார்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறுர்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்பவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக் கொள்கின்ருேம்.

மறுசூது ஆடிய காலத்தில் தன்னுடைய தேவியான துரௌபதையின் தூண்டுதலால் எம்பெருமானுடைய பன்னிரெண்டு திருநாமங்களையும் ஓதி அவனை வணங்கிப் பின்னர் தாயங்களை உருட்டுகிறான். தன்னுடைய புண்ணியத்தின் பலன் முழுவதையும் பந்தயப்பொருளாக வைத்துச் சூதாடுகிறான் தருமன்.

அந்தச் சூதாட்டத்தில் அவன் உருட்டிய காய்கள் அவனுக்கு கண்ணனுடைய அருளினாலேயே வெற்றியைத் தேடித் தருகின்றது. அக்காய்கள் மாயம் செய்கின்ற சகுனியினது விருப்பப்படி உருண்டு விழாமல், துரியோதனனின் எண்ணமானது இருளாகுமாறு, தருமபுத்திரன் வெல்லுமாறு உருண்டு விழுந்தது.

'' உருட்டிய கவறு நேமி
உடையான் அருளி னாலே
மருட்டிய சகுனி எண்ணின்
இருட்டிய விழியான் மைந்தன்
இதயமும் இருண்டு சோரத்
தெருட்டிய உணர்வின் மிக்கோன்
செப்பிய யாவும் வென்றான்''
[வில்லி-சூதுபோர்-281]

கண்ணனே பாண்டவர் கௌரவர் ஆகிய இருவருக்கும் மாமன் முறை வேண்டியவன். பாண்டவர்க்கே உண்மையில் துணையாய் நின்று அருள் புரிந்தான்.

சகுனி சூதின் போது சில மாயங்கள் புரிந்து வெற்றி பெறுகிறான். அவன் மாயங்கள் புரிந்ததை சூதாட்டக் காய்களான பாச்சிகையின் மேல் ஏற்றி ஆசிரியர் "மாயமுற்ற கவறும் அந்த மாமன் வல்லபத்திலே தாய முற்றிடங் கொடாது தருமனைச் சதித்ததே"-(சூது-188) என்பார். அவன் மாயன் என்பதை 'மருட்டிய சகுனி' என்றும் குறிப்பிடுகின்றார். ஆக தன் மருமகன் பொருட்டு மாயம்புரிகிறான் சகுனி.

கண்ணனுக்கோ மாமாயன் என்றே பெயர். அதனை வில்லியும் மாயவன் என்ற சொல்லால் குறிப்பார். 'தண் துழாய் முடி மாயவன்' (சல்-56) என்றும், இன்னும் பலவாறும், பல இடங்களில் குறிப்பிட்டுக்காட்டுகின்றார்.

அதேபோல் தன்னை அடைக்கலம் உற்றவர்களான பாண்டவர்களின் பொருட்டும் கண்ணன் பல மாயங்கள் புரிகிறான். அவன் செய்த மாமாயங்கள் எண்ணிக்கையில் மிகப்பல.

இரண்டு மாமன்களும் தமக்கு உற்றவர்களுக்காக மாயங்கள் புரியத் தயங்கவில்லை என்பதை வில்லிப்புத்தூரார் படைத்துக் காட்டுகின்ற விதமே தனி. ஆயின் சகுனி புரிந்த மாயங்கள் அவனுடைய அன்பர்களான கௌரவர்களின் அழிவிற்குக் காரணமாயிற்று. கண்ணன் புரிந்த மாயங்கள் பாண்டவர்களின் நன்மைக்குக் காரணமாயிற்று.

இப்படிப் பேருதவி புரிந்தவனை கண்ணன் உண்மையில், முதல் சூதிலேயே பாண்டவர்கள் வெற்றி பெறக்கூடிய வாய்ப்பை உருவாக்கி இருந்தால் போரே உண்டாகி இருந்திருக்காது.

பாண்டவர்கள் நேரில் சூதாட உட்கார்ந்தனர். ஆயின் துரியோதனன் அவ்வாறு உட்கார்ந்தானில்லை. அவனுடைய மாமனை சகுனியே அவர்கட்காக முன்னின்று ஆடினான். அதுபோல் பாண்டவர்களும் தன் மாமன் கண்ணன் ஆடட்டும் என்று கருதினரா? அன்றி அதற்கு வேண்டிய வழி செய்தனரா? அதுவும் இல்லை.

கண்ணன் அப்போது துவாரகையில் இருந்தான். அவனை மனதில் எண்ணியவாறாவது சூதாடத் தொடங்கினார்களா என்றால் அதுவும் இல்லை. மறுசூதில்தான், அதுவும் பாஞ்சாலி கூறிய பின்னர்தான், மனதில் எண்ணி வெற்றி பெறுகின்றனர். எனவே முதல்முறை மனதிலும் எண்ணவில்லை. அதனால் தோல்வி அடைகின்றனர். விதிவலியாற் அதுவும் அவர்கட்குத் தோன்றாமற்போயிற்றோ என்னவோ?

அன்றி, செய்கின்ற தவற்றை பெரியோர்கள் அறியா வண்ணம் மறைக்கின்ற உலக வழக்கை உத்தேசித்து அவனை எண்ணவில்லையோ?

ஆயினும் கண்ணனாவது ஓடிவந்து உதவி புரிந்திருக்கலாம். ஆரம்பம் முதல் அவன் அவர்கட்குப் பல உதவிகள் புரிந்தவன். அப்படி இருக்க அவர்கள் வேண்டிய பின்னர்தான் உதவி செய்ய வேண்டும் என்றும் இருந்தான் இல்லை.

பாண்டவர்களுக்கு அவன் புரிந்த முதல் உதவியே அவர்கள் வேண்டிக் கொண்ட பின்னர் செய்யப்பட்ட உதவி இல்லை. அவன் புரிந்த முதல் உதவியை வில்லிபுத்தூரார் தம் நூலில் கூறுகின்றார்

'' வேறொரு பகல்கழு நிரைத்து
விமனோடு
ஆறுபாய்ந்து இருவரும் ஆகும்
வேலையில்
தேறலான் வஞ்சம் தேறி வண்டினால்
ஏறினான் கடந்து அரி ஏறு
போன்றுளான் ''
[வில்லி-வரணா-10]

விளையாட்டுப் பருவத்தில் வீமனைத் தண்ணீரில் உள்ள கழுவில் வீழ்த்த துரியோதனன் முயற்சிக்கிறான். அப்போது கண்ணன் உதவுகிறான்.

கங்கைத் துறையில் இரும்பினாலும் செம்மரத்தாலும் ஆகிய கூரிய கழுக்களை நீரினில் தோன்றாதபடி உள்ளே நாட்டச் செய்கிறான் துரியோதனன். பின்னர் வீமனை 'விளையாடவா' என்று வஞ்சனையாய் அழைத்துப் போய் 'இங்குள்ள நீரில் குதிக்கிறாயா? பார்ப்போம்' என்கிறான்.

அப்போது கண்ணன் கருவண்டின் உருவம் கொண்டு கழுமுனைதோறும் உட்கார்ந்திருக்கிறான். வீமன் அதனை நோக்கி இது அது என்ன நீரில் வண்டுகள் உட்கார்ந்திருக்கின்றனவே, என்று உற்றுப் பார்க்கும் போது, அவற்றின் கீழ் கழுக்கள்

(29-ம் பக்கம் பார்க்க)

# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# நன்கொடைத் திட்டத்தின் கீழ் குடில்கள்

திருமலையில் யாத்திரிகர்களின் நலனுக்காக நன்கொடைத் தொகைகளின் முலம் பல தங்குவசதிகளான குடில்கள், அறைத்தொகுதிகள், சத்திரங்கள், விருந்தினர் விடுதிகள் போன்றவற்றைக் கட்டுவதற்குப் பொது மக்களிடமிருந்து தேவஸ்தான மேலாண்மை நன்கொடைகள் பல பெற்று வருகின்றது. இத்திட்டத்தின் விவரங்கள் பின் வருமாறு:

## கருடாத்ரி நகர் குடில்கள் திட்டம்

இத்திட்டத்தின்கீழ் ஒவ்வொன்றும் அறைத் தொகுதிகளைக் கொண்டு விளங்கும்படியான 18 குடில்கள் கட்டிடத்தின் அடித்தளத்திலும், முதல் தளத்திலும் கட்டப்படும்.

* பொதுத் தாழ்வாரம் மற்றும் குளியலறை இணைப்பு வசதியுடன் கூடிய 10×12 அடி பரப்பளவு கொண்ட அறையும் உள்ளதாக ஒவ்வொரு அறைத்தொகுதியும் விளங்கும்.

* ரூ. 30,000 வழங்கும் நன்கொடையாளரின் பெயரில் 320 சதுர அடி கட்டிட பரப்பளவு கொண்டதாக இவ்அறைத்தொகுதி விளங்கும். நன்கொடையாளர் விரும்பி, 8 அறைத் தொகுதிகளைக் கொண்ட ஒரு தனிக்குடிலுக்கு ரூ. 2.4 இலட்சமும், 4 அறைத் தொகுதிகளைக் கொண்ட ஒரு தனிக்குடிலுக்கு ரூ. 1.2 இலட்சமும், 2 அறைத் தொகுதிகளைக் கொண்ட ஒரு தனிக்குடிலுக்கு ரூ. 60,000-ம் வழங்கினால், அவை கட்டித் தரப்படும்.

## ராம் பகீச்சா விருந்தினர் விடுதி திட்டம்

கோயிலுக்கு வடகிழக்குப் பக்கத்தில் இந்த விருந்தினர் விடுதி கட்டப்படும். இவ்விடுதி முன்று தளங்களையும், ஒவ்வொரு தளமும் 50 அறைத் தொகுதிகளையும், ஒவ்வொரு அறைத்தொகுதியும் 600 சதுர அடி கட்டிடப் பரப்பளவில் விளங்கும்படியாக 14×18அடி என்ற பரப்பளவில் உள்ள அறைகளையும் கொண்டு விளங்கும். மேலும் ஒரு பொதுத் தாழ்வாரமும் கொண்டு விளங்கும்.

* ஒவ்வொரு அறைத்தொகுதிக்கும் நன்கொடையாளர் ரூ. 60,000 வழங்கவேண்டும்.

## ஸப்தகிரி தர்மசாலை

ரூ. 8.5 கோடி செலவில் "ஸப்தகிரி சத்திரங்கள்" எனும் பெயரில் இம்மாபெரும் திட்டம் மேற்கொள்ளப்படும். ஒவ்வொரு அறைத்தொகுதியும் ரூ. 80,000/- செலவில் கட்டப்படும்.

ஆகும் செலவில் ரூ. 40,000/- நன்கொடையாளர் வழங்கினால், அவ்வறைத்தொகுதி அவருடைய பெயரில் அமையும்.

## பலன்கள்

நன்கொடையாளர்கள் வருடத்தில் 60 நாட்களுக்கு இலவசமாக அவருடைய நன்கொடை அறைத் தொகுதியில் அல்லது குடிலில் தங்கலாம். ஆனால் இந்தச்சலுகை நிறுவனங்களுக்கும், வாணிகக் கழகங்களுக்கும் 15 வருடங்களுக்கு மட்டுமே அளிக்கப்படும்.

இத் தங்குவசதி ஒதுக்கீடுகளின் போது நன்கொடையாளர்களின் உற்றார் உறவினர்களுக்கு முன்னுரிமை வழங்கப்படும்.

ஒவ்வொரு அறைத்தொகுதி அல்லது குடிலிலும் சம்பந்தப்பட்ட நன்கொடையாளர்களின் பெயர்ப் பலகைகள் நிரந்தரமாகப் பொருத்தப்படும்.

மேற்படி திட்டங்களில் பங்கேற்க விரும்பும் நன்கொடையாளர்கள் அதற்கான தொகையினைச் "செயலாட்சித் தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி." எனும் பெயரில் காசோலை மூலமாகப் பெற்று, தேவையான தகவல்களுடன் கூடிய கடிதத்துடன் இணைத்து அவற்றை, "தலைமை கணக்கு அலுவலர் தி. தி. தேவஸ்தானம் திருப்பதி" எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும்.

மேலும் விவரங்களுக்கு "செயலாட்சித்தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

செயலாட்சித் தலைவர்.

" தரும் பொருள் சிறிதே; பெறும் அருள் பெரிதே "

# ஆவணி அவிட்ட விளக்கம்

**சித்தாந்தி E. சம்பந்தாச்சாரி,**
**கோவில்பதாகை.**

**வைதீக வாழ்வு :**

பாரமார்த்திக உண்மைகளை அடிப் படையாகக் கொண்டு அநுஷ்டிக்கும் வாழ்க்கையின் நடைமுறைக்கு 'வைதி கம்' என்று சொல்லப்படும்.

சமுதாய வாழ்க்கையைப் பண் படுத்த மேலாம் நெறிமுறைகளைக் கொண்டு, அறவழியில் நின்று நிலைத்து வாழ்வதற்கு இந்த வைதீக வாழ்வு மாந்தர்க்கு இன்றியமையாத தொன் றாகும்.

வைதீக வாழ்வைக் கடைப்பிடிக்கு மளவு லௌகிகமும் சீர்படும். வைதி கத்தினின்று வழுவுகின்ற அளவிற் கேற்ப மாந்தர் சீர்கெட்டு கீழ்நிலைக்கு வீழ்கின்றனர்.

எனவே மேல் நிலையை நாடும் மாந் தர் வைதீக நெறிமுறைக் கோட்பாடு களை அறிந்து அநுஷ்டித்து வருதல் மிகமிக அவசியமாகும். அவ்வாறு அறிந்து அநுஷ்டிக்கும் நடை முறைக்குச் சடங்கு எனப் பெயர்.

**சடங்கு :**

வேதத்திற்கு அங்கங்கள் ஆறு. அவை சிக்ஷா, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜோதிஷம், கல்பம் என்பன வாகும். இந்த ஆறு அங்கங்கள் 'ஷட் அங்கம்' என்று சொல்லப்படும். 'ஷட்' என்றால் ஆறு, 'அங்கம்' என் றால் உறுப்பு என்று பொருள். எனவே ஆறு சாஸ்திரங்களை ஆறு அங்கங் களாகக் கொண்டுள்ளது வேதம்.

'ஷட் அங்கம்' என்ற சொல் 'ஷடங் கம்' என இணைந்து, 'சடங்கம்' என மருவியது. இந்த சடங்கம் கூறும் நெறிமுறைகளே 'சடங்கு' எனப் பெயர் பெற்றது.

இச்சடங்குகளைப் பற்றிய விளக்கங் களை நாம் யஜுர் வேதத்திலும், மற் றும் கிருஹ்ய ஸூத்திரத்திலும் காண லாம். சடங்குகளைச் சிரத்தையுட னும், அவைகளின் தத்வார்த்தங்களை உணர்ந்தும் நன்கு அநுஷ்டித்தல் வேண்டும்.

"யதேவ வித்யயா கரோதி ச்ரத்தயா உபநிஷதா ததேவ வீர்யவத்தரம் பவதி"

எனும் சாந்தோக்ய உபநிஷத வாக் கியத்தின்படி அர்த்தம் தெரிந்து அநுஷ்டிக்கும் சடங்கு அதிக வீர்ய முள்ளதாகின்றது எனத் தெளிவா கின்றது. ஆகவே நாம் அநுஷ்டிக் கும் வைதீகச் சடங்குகட்குப் பொரு ளுணர்ந்து விளக்கங் கண்டுச் செயல் பட வேண்டும் என்பது நமது சிறந்த கடமையாகும். இதனைக் கருத்திற் கொண்டு நாம் தொன்று தொட்டு அநுஷ்டித்து வரும் வைதீகச் சடங் காகிய ஆவணி அவிட்டத்திற்கு (யஜுர் உபாகர்மாவுக்கு) நல்ல தொரு விளக்கம் அனைவருக்கும் பயன் படும் வகையில் ஈண்டு எழுதப்படு கின்றது.

**பரமனும் வேதமும் :**

வேதம் மிகமிகப் பழமையானது. "முன்னைப்பழம் பொருட்கும் முன் னைப்பழம் பொருளே" என மாணிக்க வாசகப் பெருமான் இறைவனை அழைக்கின்றார். அருணகிரி நாதர், "வேத மந்த்ர சொரூபா நமோ நம" என இறைவனை வணங்குகிறார். "வேத ஸாரம் பரம் ஜ்யோதிர்" என வேதத்தின் சாரமாக மேலாம் ஜோதி சொரூபமாக இறைவன் இருக் கின்றார் என ஆதிசங்கரர் கூறுகின் றார். எனவே பரமனும் வேதமும் ஒன்றே, பரமனைப் போன்று வேதமும் அநாதி, பழமையானது எனப் பெறப் படுகின்றது.

**காலதேச தோஷம் :**

காலங்கடந்த ஆகாரத்திற்குத் தோஷம் உண்டாவது போன்று, பழ மையான வேதத்திற்கும் காலதேச வர்த்தமான சூழலில் தோஷம் உண் டாவது இயல்பு. இத்தோஷத்திற்கு 'யாத யாம தோஷம்' எனப் பெயர் (யாத: கடந்த; யாம=ஜாமம் அல் லது காலம்) இத்தோஷத்தினால் வேத சக்தி மாசுபடுகிறது; குறைகிறது. எனவே, இதை நிவர்த்திக்க நமது முன்னோர்களாகிய ரிஷிகள் நமக்கு வகுத்துள்ள நெறிமுறைச் சடங்கு 'உபாகர்மா' என்பதாகும்.

**உபாகர்மா :**

ஆலயங்களில் அருட்சக்தி குறையா திருக்க வேண்டித் தக்கக் காலங்களில் கும்பாபிஷேகம் செய்வது போன்று வேத சக்தி குறையாதிருக்க இந்த 'உபாகர்மா' சடங்கை ஒவ்வொரு ஆண்டிலும் சாஸ்திரப்படி வரை யறுக்கப்பட்ட வைதீக நாளில் நாம் செய்கிறோம்.

'உபாகர்மா' என்றால் வேத அத்ய யனம் (வேதம் ஓதுதல்) எனும் சடங்கை ஆரம்பித்தல் என்று பொருள். ரிக், யஜுர், ஸாமம் எனும் மூன்று வேதக்காரர்கட்கும் மூன்று தனித்தனி நாட்கள் வரையறுக்கப் பட்டுள்ளன. தங்களுக்குரிய அந்தந்த நாட்களில் அவரவர்கள் வேத விதிப் படி சடங்கைச் செய்து நூதன யஜ் ஞோபவீதம் (புதுப்பூணூல்) அணிந்து வேதம் ஓதுதலை ஆரம்பித்தல் வேண் டும்.

**ரிக் உபாகர்மா :**

இது ஆவணி அவிட்டத்திற்கு அதாவது யஜுர் உபாகர்மாவுக்கு முன்தினம் சிராவண மாதம் திரு வோணம் நக்ஷத்திரத்தில் அநுஷ்

டிக்கப்படுகின்றது. ரிக் வேதிகள் தங்களுக்குரிய வேத விதிப்படிச் சடங்கைச் செய்து புதுப் பூணூல் அணிந்து வேதம் ஓதுதலை ஆரம்பித்தல் வேண்டும்.

**யஜுர் உபாகர்மா (ஆவணி அவிட்டம்) :**

சிராவண மாதம் (ஆவணி மாதம்) அவிட்ட நக்ஷத்திர தினத்தில் இது செய்யப்படுவதால் இதற்கு 'ஆவணி அவிட்டம்' என்று பெயருண்டாயிற்று. இந்த வைதீக தினத்தில் யஜுர் வேதிகள் தங்களுக்கு விதிக்கப்பட்டுள்ள வேத நெறிமுறைப்படிச் சடங்கைச் செய்து நூதன யஜ்ஞோபவீதம் ஓதுதலை ஆரம்பிக்க வேண்டும்.

**ஸாமோபகர்மா :**

இது ஆவணி மாதம் அஸ்த நக்ஷத்திர தினத்தில் அநுஷ்டிக்கப்படுகின்றது. இந்த வைதீக தினத்தில் ஸாம வேதிகள் தங்களுக்குரிய வேதநெறி முறையில் சடங்கைச் செய்து நூதன யஜ்ஞோபவீதமணிந்து வேதம் ஓதுதலை ஆரம்பித்தல் வேண்டும்.

உபாகர்மாவின் சடங்கு முறை இக்கட்டுரையின் முடிவில் தரப்பட்டுள்ளது. அதை அனுசரித்து நடத்தல் உத்தமம்.

**பொது விதி :**

இந்த வேதாக்த 'உபாகர்மா' பிரம்மாச்சாரி, கிருகஸ்தன், வான ப்ரஸ்தன் ஆகிய மூன்று ஆசிரம நிலையில் உள்ளவர்கட்கு விதிக்கப்பட்டுள்ளது'. உபநயனமான பிரம்மச்சாரிக்கு முதல் ஆவணி அவிட்டத்தில் (சிராவணத்தில்) வேத ஆரம்பம் விதிக்கப்பட்டுள்ளது. மற்றவர்களுக்கு வேத அத்யயனம் விதிக்கப்பட்டுள்ளது.

யஜ்ஞத்துடனும் புது யஜ்ஞோபவீதத்துடனும் வேதம் ஓதுதலை அதாவது வேத அத்யயனத்தை இந்த உபாகர்மா அன்று ஆரம்பித்து, தை மாதம் பௌர்ணமி வரை அத்யயனம் செய்து, தை மாத பௌர்ணமி தினத்தில் முறைப்படி முடித்தல் வேண்டும்.

ஆவணி அவிட்டத்தின் மறு தினத்தில் ப்ராத: சந்த்யா காலத்தில் காயத்ரீ மந்த்ர ஜபம் விதிக்கப்பட்டுள்ளது.

---

**காயத்ரீ மந்த்ரம் :**

'காயத்ரீ' என்பது வேதங்களுக்குத் தாய். கானம் செய்பவரைக் காத்து ரக்ஷிப்பதால் 'காயத்ரீ' எனச் சிறப்பித்துக் கூறப்படுகின்றது.

காயத்ரீ மந்திரம் மூன்று பாதங்களையும், பத்துப்பதங்களையும், இருபத்தி நான்கு அக்ஷரங்களையும் கொண்டு விளங்குகின்றது. ரிக், யஜுர், ஸாமம் ஆகிய மூன்று வேதங்களின் சாரமாக காயத்ரீ மந்திரத்தின் மூன்று பாதங்களும் விளங்குகின்றன. எனவே காயத்ரீ மந்திரத்தை ஒரு முறை ஜபித்தால் மூன்று வேதங்களையும் ஒருமுறை பாராயணம் செய்த பலன் உண்டாகும். ஆகவே வேதசாரமான இம்மந்திரம் மகா மகத்துவம் பொருந்தியதாகும். இதை ஆவாஹனம் செய்ய வேதமே ஒரு மந்திரத்தைக் கூறுகின்றது. ரிஷி, சந்தஸ், தேவதை ஆகியவற்றுடன் 'ஆயாது' என ஆரம்பிக்கும் மந்திரத்தைக் கூறி பிரார்த்தித்தல் வேண்டும் எனவும் வற்புறுத்துகின்றது. மற்ற மந்திரங்களுக்கு இது போன்று ஆவாஹன மந்திரம் வேதத்தில் கூறப்படவில்லையாதலால் மந்திரங்களில் மிகச் சிறந்தது 'காயத்ரீ' என்பதற்கு இதைவிட வேறு சான்று தேவையில்லை.

நமது முன்னோர்களாகிய ரிஷிகள் ஒளியும், ஆன்மீக அறிவாற்றலும், அருட் சக்தியும் பெற்று, உலகினுக்கே ஒளியூட்ட வல்ல மகான்களாகத் திகழ்ந்தது அவர்கள் செய்த அநுஷ்டானங்களில் மிக முக்கியமான காயத்ரீ மந்த்ர ஜப சாதனத்தின் பயனால்தான்.

எனவே மெய்ஞ்ஞானிகளாகிய நம் முன்னோர்கள் இந்த காயத்ரீ மந்த்ர ஜபத்தை, ஸந்த்யா வந்தனத்தின் ஓர் முக்கியமான அங்கமாக விதித்துள்ளார்கள். அதனுடன் ஆவணி அவிட்டத்தின் மறுதினம் காயத்ரீ மந்த்ர ஜப தினமாக வற்புறுத்தப் பட்டுள்ளது.

**வேதமாதாவான காயத்ரீ மந்திரம் கீழ்வருமாறு :**

ஓம் |
பூர்ப்புவஸ்ஸுவ: |
தத்ஸவிதுர்வரேண்யம் |
பர்க்கோ தேவஸ்ய தீமஹி |
தியோ யோ ந: ப்ரசோதயாத் ||

(ப்ரமாணம்: ரிக் வேதம் 3-62-10; யஜுர் வேதம் (தை. உப.) 4-35; ஸாம வேதம் 1462).

இக்காயத்ரீ மந்திரத்தின் பொருள் "யார் நமது புத்தி சக்தியைத் தூண்டுகிறாரோ அந்தச் சுடர்க் கடவுளின் மேலான ஜோதி ஸ்வரூபத்தை தியானிப்போமாக" என்பதாகும். "சித்த மறியாதபடி சித்தத்தில் நின்றிலகு திவ்ய தேஜோமயத்தை" என தாயுமான சுவாமிகள் கூறியருளனதை ஈண்டு ஒப்பு நோக்குதல் சிறப்புடைத்தாகும்.

இம்மந்திரத்தை ஜபிப்பதால் ஓஜஸ், தேஜஸ், பலம் ஆகிய இவையனைத்தும் அடையப் பெற்று, ப்ராஹ்மண்யத்தில் சிறந்து, ப்ரஹ்ம தேஜஸுடன் திகழுவார்கள் என்பது நமது முன்னோர்கள் கண்ட உண்மையாகும்.

**பிராஹ்மணீயம் :**

'ப்ரஹ்மஜ்ஞானந்து ப்ராஹ்மண:' என்பது சுருதி வாக்கியம். பாரமார்த்தீகப் பேருண்மையை உணர்த்தும் ஞானமே மேலாம் ப்ரஹ்ம ஞானமாகும். இந்த ப்ரஹ்ம ஜ்ஞானத்தையடைய விதிக்கப்பட்டுள்ள பெருநெறிகளை மேற்கொண்டு சதாசாரத்தில் நிலைத்து நிற்கும் சிறந்த வாழ்க்கைக்கு ப்ராஹ்மணீய வாழ்க்கை எனப் பெயர். ப்ராஹ்மணீயம் மேலோங்குமளவிற்கு ப்ரஹ்மஜ்ஞானம் நிலைத்து நிற்கும். ப்ரஹ்ம தேஜசும் பொலிந்து விளங்கும்.

நாம் ப்ராஹ்மணீயத்தில் நிலைத்து நின்று, உயர்ந்த பிரம்ம தேஜசுடன் சிறந்து விளங்க, நமது முன்னோர்களாகிய மகரிஷிகள் நமக்கு விதித்துள்ள ஸந்த்யா வந்தனம், காயத்ரீ ஜெபம், உபாகர்மா (வேத அத்யயனம்) ஆகிய வேதோக்த கர்மாக்களைத் தவறாது நாம் கடைப்பிடித்து, சதாசாரத்துடன் வாழ்ந்து வருவோமாக.

**யஜுர் உபாகர்மா-ஆவணி அவிட்ட க்ரியைகள் கீழ்வருமாறு :**

**உபநயனமான ப்ரம்மசாரி அநுஷ்டிக்க வேண்டியவை :**

1. ப்ராத: கால ஸ்நானம்
2. ப்ராத: கால ஸந்த்யா வந்தனம்
3. ஸமிதாதானம்
4. க்ஷௌரம்
5. ஸ்நானம்
6. ஸமிதாதானம்
7. நூதன யஜ்ஞோபவீத தாரணம்
8. மௌஞ்ஜி, அஜினம், பலாச தண்டம் தரித்தல்
9. பலாச ஹோமம் (1008 அல்லது 108)
10. காமோ கார்ஷீத் ஜபம் (1008 அல்லது 108)
11. உத்ஸர்ஜன ஹோமம்
12. ரிஷி தர்ப்பணம்-ஹோமம்
13. மஹா ஸங்கல்பம்
14. வேதாரம்பம்
15. ஜயாதி ஹோமம்
16. மறுநாள் ப்ராத: ஸந்த்யா-காயத்ரீ ஜபம் (1008)

**கிருஹஸ்தர் அநுஷ்டிக்க வேண்டியவை ;**

1. ப்ராத: கால ஸ்நானம்
2. ப்ராத: கால ஸந்த்யா வந்தனம்
3. ஔபாஸனம்
4. நூதன யஜ்ஞோபவீத தாரணம்
5. காமோ கார்ஷீத் ஜபம் (1008 அல்லது 108)
6. காண்டரிஷி தர்ப்பணம்-ஹோமம்
7. மஹா ஸங்கல்பம்
8. வேத அத்யயனம்
9. ஜயாதி ஹோமம்
10. மறுநாள் ப்ராத: ஸந்த்யா காயத்ரீ ஜபம் (1008).

*

# வரலக்ஷ்மி விரதம்

வருடந்தோறும் சிராவண (ஆடி அல்லது ஆவணி மாதம்) பௌர்ணமிக்குமுன் வரக்கூடிய வெள்ளிக் கிழமையன்று சுமங்கலிகள் இந்த விரதத்தை அனுஷ்டித்து, வரலக்ஷ்மிக்குப் பூஜை செய்வர். அன்றைய தினம் வீட்டைப் பசுஞ்சாணத்தால் மெழுகிக் கோலமிட்டு நடு வீட்டில் மேடை அமைத்து மண்டபம் போலாக்கி, அம் மண்டபத்தில் முதலில் ஓர் அடி சச்சதுரமாக நெல்லைப் பரப்பி, அதன்மீது ஒரு தாம்பாளத்தில் அரிசியைப்பரப்பி, அதன்மீது ஒரு வெள்ளி அல்லது செப்புக்குடத்தை வைத்து, அதை அரிசி அல்லது ஜலத்தால் நிரப்பி மாவிலைக் கொத்து, தேங்காய் வைத்து, சந்தனம், குங்குமம், மலர் மாலை, அக்ஷதை இவற்றால் அலங்கரித்து, அந்த கலசத்திற்கு மேலே தேவியின் பிரதிமையை வைத்து த்யான ஆவாஹநாதி ஷோடசோபசார பூஜைகளும் செய்து மனமுருகித் தம் வாழ்வு துலங்க வேண்டுமென வேண்டி, வரமருளும் வரலக்ஷ்மியை மனதில் துதித்து நோன்புக் கயிற்றை அணிந்து கொள்வர்.

இத்தருணத்தில் இந்த லக்ஷ்மி தேவியைப் பற்றிச் சற்று விளக்கமாய்த் தெரிந்து கொண்டு பூஜித்தால் பலன் இன்னும் சற்றுக் கூடுதலாகக் கிடைக்குமல்லவா?

பாரதத்தில் பெண் தெய்வங்களுள் ஸ்ரீலக்ஷ்மி தேவியின் ஸ்தானம் உயர்ந்தது. அவள் சொர்கத்தின் லக்ஷ்மி. பூலோகத்தில் அரசர்களிடம் ராஜ்யலக்ஷ்மி. வீடுகளில் இல்லத்தரசிகளின் உருவில் கிருகலக்ஷ்மி. வரம் வேண்டும் பக்தர்களுக்கருளும் நேரம் வரலக்ஷ்மி. இப்படி எல்லாம் அவள் புகழ் பெறுகிறாள்.

சௌந்தர்யம், செல்வம், போகம், ராஜரீகம் இவற்றிற்குக் காரணமானவள் லக்ஷ்மி.'

பாரதத்தின் பல்வேறு பகுதிகளில் லக்ஷ்மியின் வழிபாடு நடந்து வந்திருக்கிறது. முக்கியமாக தீபாவளி புனித நாளில் லக்ஷ்மி பூஜை பல்வேறு பகுதிகளில் பரவிப் பிரஸித்தம் அடைந்திருக்கிறது. யஜுர் வேத காலந்தொடங்கி லக்ஷ்மியின் வழிபாடு நடந்து வருகிறது. யஜுர்வேத ஸ்ரீ ஸூக்தத்தில் மஹா விஷ்ணுவுக்கு 'ஸ்ரீ' என்றும் 'லக்ஷ்மி' என்ற இரு மனைவியர் பற்றிய விவரங்கள் உள்ளன.



லக்ஷ்மி, விஷ்ணு இவர்களின் பந்தம் பற்றிய செய்தி அனைவருமறிந்ததே. புராணங்களில் காணும் செய்தியின்படி தேவாசுரர்கள் பாற்கடலைக் கடைந்தபோது காமதேனு, ஐராவதம், அமுதம் ஆகியவற்றுடன் லக்ஷ்மியும் தோன்றினாள். அவள் தோன்றும்போது மின்னல் போன்ற ஒளி பத்துத் திசையிலும் ஜொலித்தது. அவளுடைய அழகு, பரந்த மனம், பருவம், வண்ணம், மகிமை ஆகியவை தேவர், அரக்கர் மானிடர் என எல்லோரையும் கவர்ந்தது. எல்லோரும் அவளைப் பெற விரும்பினார்கள். தாமரை மாலையை ஏந்திய வண்ணம் மஹாலக்ஷ்மி, நற்குணங்களெல்லாம் பொருந்திய ஆண் மகனைத் தேடிப்புறப்படும்போது, அவள் முகத்தில் காணப்பட்ட சோபையை வர்ணிப்பது எளிதல்ல. நித்யனும் குணக்குன்றுமான பகவான் விஷ்ணுவைக் கண்டவுடன் மாலையை அவர் கழுத்தில் இட்டுக் கணவராக வரித்தாள் ஸ்ரீதேவி.

திருமகளோடு காட்சி தரும் விஷ்ணுவைத்தான் திருமால் என்கிறார்கள். திருமாலை சாதாரணமாக லக்ஷ்மி நாராயணமூர்த்தி என்று கூறுவது உண்டு. நாம் பொதுவாக தேவர்களை அன்போடு துதித்து வணங்கி, வழிபட்டால்... அவர்கள் திண்ணமாய் அருள்பாலிப்பார்கள் என்பது இந்து கலாச்சாரக்கோட்பாடு. ஆனால் எந்தெந்த முறையில் எந்த தேவர்களை வழிபட்டு, மகிழ்வித்து என்னென்ன நன்மைகளை அடையலாம் என்பதற்கு எடுத்துக் கொள்ளும்-தொடங்கும் எந்த அலுவலும், இடையூறு இல்லாமல் இனிதே நிறைவேற விரும்புவோர் முதலில் விநாயகரை (பிள்ளையாரை) வணங்கி வேண்டிக் கொள்ள வேண்டும் என்பதும், கலைகள் என்றால் கலைவாணி என்பதுபோல எல்லாவகைச் செல்வங்களையும், அஷ்ட ஐச்வர்யங்களையும் அடைய விரும்புவோர் மாயா சக்தி வடிவாக விளங்கும் "ஸ்ரீலக்ஷ்மி தேவியை" வணங்கி வேண்டிக் கொள்ள வேண்டும். இது வியாசர் வாக்கு.

முன் ஒரு காலத்தில், கேசவப் பெருமாள் மேரு மலையின் சிகரத்தில் லக்ஷ்மிதேவியோடு சுகமாக வீற்றிருக்

திரு. S. சந்திரமௌலி
திருப்பதி.

கும்போது, லக்ஷ்மிதேவியை நோக்கி, "தேவி! மனிதர்கள் எவ்வாறு நடந்து கொண்டால், அவர்களை விட்டு நீங்காமல் நீ எப்பொழுதும் நிரந்தரமாக வசிப்பாய். அதனைக் கூறுவாயாக" என்று சுகர் விநோதமாகக் கேட்கின்றார்.

**ஸ்ரீ லக்ஷ்மிதேவி அளித்த பதில்**

"வெண்மை நிறமுள்ள அழகான மாடப்புருக்கள் எங்கு இனிது வாழ்கின்றனவோ, அங்கு நான் வாழ்ந்து வருகின்றேன். அழகான தோற்றமுள்ள பெண் எந்த இல்லத்தில் வசிக்கின்றாளோ, அங்கு நான் இனிது வாழ்ந்து வருகின்றேன். கலகம் என்பதையே விரும்பாத பெண் வாழ்கின்ற வீடு, என் வீடாகும். பொன் மணிபோல தானியங்கள் ஏங்குக் குவிந்து விளங்குகின்றதோ, அங்கு நான் இருக்கிறேன். உமி சிறிதும் இல்லாமல் வெள்ளி போன்று துலங்கும் அரிசி எங்குக் காணப்படுகின்றதோ, அங்கு நான் எப்பொழுதும் வாழ்கிறேன். தான் உண்ணுகின்ற உணவை பிறருக்கும் ஓரளவு அளித்து அல்லது எடுத்து வைத்தப் பின்னர் எவன் உண்கின்றானோ அவன் எனக்குப் பிரியமானவன். எவன் அன்போடு இனிமையாகப் பேசுகின்றானோ அவன் எனக்குப் பிரியமானவன். பணிவோடு தன் பெற்றோருக்கும், பெரியவர்களுக்கும் எவன் தொண்டு புரிந்து வருகின்றானோ அவனையும், நிறைந்த கல்வி அறிவும், பணிவும் அமையப் பெற்றவனை விரும்பிக் காப்பாற்றப் போவேன். பிற உயிர்களுக்குத் துன்பத்தை உண்டாக்காமல் வாழ்பவன் என் நட்புக்கு உரியவன். மனித சமூஹத்தில் பொதுவான அன்பு பாராட்டி நடப்பவன் இத்தகைய குணங்களுக்கு ஆதாரமாக விளங்குபவன் எனக்கு மிகவும் பிரியமானவன். எந்த வேலையிலும் சிரத்தையுடையவன் அதாவது எடுத்ததை முடிக்கும் அக்கறை உள்ளவன் என்னுடைய பிரியத்துக்கு உரியவனாகிறான். இத்தகையவர்களை விட்டு நான் எங்கும் பிரியேன்.



எல்லோரா குகைக் கோயில்கள்.

இங்கு நான் குறிப்பிட்டக் குணங்கள், செயல்கள் பலவும் ஒருவனிடத்தில் அமையாமல் இருக்கலாம். எனினும் 'தியாகம்' என்ற ஒரே ஒரு குணமாவது எந்த மனிதனிடத்தில் இருக்கின்றதோ அந்த மனிதன், எல்லா விதமான லக்ஷணங்களும், குணங்களும் பொருந்தியவன் போன்றே என்னால் கருதப்படுவான். நான் எப்பொழுதும் அவனைவிட்டு நீங்காமல் வாழ்ந்து வருவேன்.

அது ஏன் என்றால்...

தியாகம் வளரும்தோறும் தர்மம் வளர்கின்றது.

தர்மம் வளரும் இடத்தில் என்னைத் தவறாமல் காணலாம். (தர்மோ ரக்ஷதி ரக்ஷித:) அறம் காக்க அது நம்மைக் காக்கும்"

'தாயே! தியாகம் என்பது என்ன?'

"காலம், இடம், பாத்திரம் அறிந்து அதாவது உரிய காலத்தில், உரிய இடத்தில், தகுதியான மனிதருக்கும் பிராணிகளுக்கும் தனது உடல், பொருள், ஆவிகளால் இயன்றவற்றை உள்ளன்போடு உவந்து உதவி செய்தல்.

இனி, நான் வசிக்கும் வெளிப் பொருள்களில் சிலவற்றைக் கூறுகிறேன். நெல்லி மரம், கோமயம் (பசுஞ்சாணி) சங்கு, தாமரை மலர், வெண்மையாகவும் பரிசுத்தமாகவும் உள்ள ஆடைகள் இவற்றில் நான் எப்பொழுதும் வசித்து வருபவள். ஆதலால், தம்மிடம் வசிக்க வேண்டும் என்று யார் என்னை விரும்புகிறார்களோ அவர்கள் தங்களுடைய தினசரி வாழ்வில் இங்கு நான் தெரிவித்த பொருள்களை உபயோகித்துப் பயன்படுத்தி வரட்டும். (உதாரணமாக, தினந்தோறும் உணவில் நெல்லிக் காயைச் சேர்த்துக் கொள்ளலாம். நெல்லிக்காய் ஊறுகாய் உடலுக்கு நலம் தரும். "அதிர்ஷ்டத்துக்கு புத்தி அனுசரணை" என்பது போல உள்ளத்தில் தெளிந்த அறிவை உண்டு பண்ணும். உடல் ஆரோக்யத்தோடு பாதுகாக்கும்.) அடுத்தது திருப்பாற்கடலில் என்னோடு கூடப் பிறந்த காமதேனுவின் வம்சத்தில் வாழும் பசுக்களின் உணவிலிருந்து சாணகம் வெளி வருவதால் அந்தத் தூய பொருளிலும் நான் வாழ்கிறேன். அவ்வாறே சங்கு எனது சகோதரன். அதிலும் நான் பிரியத்

# தூப்புல் மஹா தேசிகர்

காஞ்சி மாநகரம் பல சைவ, வைணவப் பெரியார்களை இம் மண்ணுலகிற்குத் தந்த பேறுபெற்ற நகரமாகும். இக் காஞ்சி மாநகரத்திற்கு அருகில் உள்ள 'தூப்புல்' என்ற பகுதியில்தான் இன்றைக்கு சுமார் 700 ஆண்டுகளுக்கு முன் ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகன் அனந்த சூரி, தோதாரம்மை ஆகிய தம்பதிக்குத் திருமகனாய்த் தோன்றினார். தேசிகர் ஸ்ரீ வேங்கடேசப் பெருமான் அவதரித்த புரட்டாசித் திருவோணத்திலேயே ஜனித்ததால் பெற்றோர்கள் குழந்தைக்கு 'வேங்கடேசன்' என நாமகரணம் சூட்டினர். வேங்கடேசனின் ஐந்தாவது அகவையில் அவருக்குப் பெற்றோர்களால் அக்ஷராப்யாஸம் செய்து முடிக்கப்பட்டது.

வேங்கடேசனின் அம்மான் கடாம்பி அப்புள்ளார் என்பவர் காஞ்சீபுரத்தில் எழுந்தருளியிருந்த நடாதூர் அம்மாள் என்பவரிடம் வேதாந்த காலக்ஷேபம் செய்து வந்தார். ஒரு சமயம் அவர் காலக்ஷேபத்திற்குத் தன் மருமகனையும் அழைத்துச் சென்றார். காலக்ஷேபம் நடுவில் தடைபடவே நாடாதூர் அம்மாளுக்கு விட்ட இடம் மறந்து விட்டது. பாலகன் வேங்கடநாதன் விட்ட இடத்தை எடுத்துத் தந்தார். வேங்கடேசனின் முகதேஜஸ், சொல்வன்மை ஆகியவற்றைக் கண்டு வியந்த நாடாதூர் அம்மாள் வேங்கடேசனை 'நீ நமது வைணவ மதத்தை இப்பூவுலகில் நிலைநிறுத்தி எல்லா நலன்களையும் பெறுவாய்'' என்று திருவாய் மலர்ந்தார். இதனை சிரமேற்கொண்ட தேசிகர் தம் அம்மானிடம் காவிய, அலங்கார, தர்க்க, வியாகரண சாஸ்திரங்களையும், ஸ்ரீ பாஷ்யம், கீதா பாஷ்யம், பகவத் விஷயம் முதலியவைகளையும் கசடறக் கற்றுணர்ந்தார். இவரது கூர்ந்த அறிவினையும், அடக்கத்தினையும் கண்ட பெரியோர்கள் இவரை வியந்து பாராட்டினர்.

ஸ்ரீ தேசிகன் தமது இருபதாவது அகவையில் திவ்ய தேச யாத்திரையை மேற்கொண்டு பல திருத்தலங்களுக்குச் சென்றார். அவர் திருவஹீந்திபுரத்திற்குச் சென்று அங்குக் கோயில் கொண்டுள்ள தேவநாதப் பெருமானைத் தரிசித்து பின் அங்குள்ள 'ஔஷாதாத்ரி' எனும் மலையில் ஸ்ரீ ஹயக்ரீவப் பெருமானை நோக்கி தவம் இருந்து கடும் விரதம் பூண்டார். இதனால் மனம் மகிழ்ந்த ஹயக்ரீவர் தேசிகர் முன் தோன்றி ஞானமிருதம் எனும் தேவாமிருதத்தை ஊட்டியருளினார். அதை உண்ட உடனேயே ஸ்ரீ தேசிகருடைய திருநாவிலிருந்து, கவிதாப்ரவாஹம் மடை திறந்த வெள்ளம்போல் பெருக்கெடுத்து ஓடியது.

அங்கேயே தேசிகர் ஹயக்ரீவரைப் பற்றியும், ஸ்ரீ கருட பகவானைப் பற்றியும் பாசுரங்களைப் பாடினார். வேதாந்த தேசிகர் தம் வாழ்நாள் முழுவதையும் ஆண்டவனுக்குத் தொண்டு செய்வதிலேயே செலவிட்டார். அவர் வடமொழியிலும், தமிழ்மொழியிலும் 112 கிரந்தங்களை இயற்றினார். மேலும் ஒரே ஒரு இரவில் மட்டும் ஸ்ரீரங்கத்தில் பள்ளி கொண்டுள்ள ரங்கநாத பெருமானின் பாதுகையைப்பற்றி 'பாதுகா ஸஹஸ்ரம்' எனும் ஆயிரம் பாசுரங்களை இயற்றினார்.

இத்தகைய சிறப்புக்களைப் பெற்றிருந்தாலும் தேசிகர் ஒரு போதும் கர்வமோ, கோபமோ கொண்டதில்லை. தேசிகர் தம்மீது பொறாமை கொண்டு அவமதித்தவர்களையெல்லாம் தூற்றாமல் அவர்களே வெட்கித் தலைகுனியும்படி போற்றிப் புகழ்ந்து உண்மை வைணவத்தை உலகிற்கு உணர்த்தினார்.

இவ்வாறு ஞானத்திற்கும், ஆசார அனுஷ்டானங்களுக்கும் ஓர் உன்னத புருஷனாய்த் திகழ்ந்த ஸ்ரீமந் நிகமாந்த மஹா தேசிகனின் பூவுலக அவதாரத்தையும் மனதில் தயானிப்பவர்களுக்கு ஸகல க்ஷேமங்களும் விளையும் என்பதில் சிறிதும் ஐயமுண்டோ?

திரு. வ. நாராயண் நம்பி.

தோடு வாழ்கிறேன். (சங்குப் பாலாடையில் குழந்தைகளுக்குப் பால் ஊட்டுதல் திருமகளில் அருளையும் சேர்த்து ஊட்டுவதாகும். உலோகங்களால் ஆனவை அன்று; கடலில் தோன்றியது. தாய்மார்களுக்கு லக்ஷ்மியின் இந்த வாக்கு நினைவில் இருக்கத் தக்கது.) தாமரை மலரில் எப்பொழுதும் நான் வாழ்பவள் என்பதை வையகம் முழுதும் அறியும். செழிப்பான தாமரை மலர், சங்கின் மத்திய பாகம், சந்திர மண்டலம், சிவ பெருமான், நாராயணனுடைய இதயம், பொக்கிஷம், பணப்பெட்டி, தினந்தோறும் விழாக் கொண்டாடும் இல்லங்கள், ஆலயங்கள் இவற்றில் தொடர்ந்து நான் வாழ்ந்து வருகின்றேன்.

சாஸ்திரங்களில் கூறிய முறைப்படி கணவனிடத்தில் பக்தி கொண்ட மனைவி, தினமும் கணவனது சொல்லை மதித்து சேவை செய்து வரும் நல்லாள், கணவன் புசித்து மீந்ததை இனிது உண்ணும் நங்கையான கற்பு நெறியில் சிறந்து விளங்கும் சுந்தரியாளின் மேனியில் நான் தினந்தோறும் இரவு-பகல் எந்நேரமும் இனிது வாழ்ந்து வருவேன்.

நான் வாழ விரும்புகின்ற கற்பரசியின் வெளி அடையாளங்களையும் விளக்குகின்றேன் கேளீர்! நான் வாழும் தாமரை மலர்போல மலர்ந்த மகிழ்ந்த முகம் உடையவளாக அவள் எப்பொழுதும் காணப்பெறுவாள். பேதைக் குணம் சிறிதும் இல்லாமல் தைரியமிக்கவளாகவும் தோன்றுவாள். சௌபாக்யவதியாகவும் விளங்குவாள். அவள் ரூப லாவண்யம் நிறைந்திருப்பாள். கண்ணுக்கு இனியவள். கணவனுடைய கருத்துக்கு ஏற்ப நடப்பாள். அத்தகைய பதிவிரதைகளான மங்கையரிடத்தில் நான் எந்நேரமும் நீங்காமல் வாழ்ந்து வருகின்றேன். எத்தகைய மங்கையரிடத்தில் நான் வாழ்ந்து வருகின்றேன் என்பதையும் சில அடையாளங்களோடு இங்குக் கூறு

கின்றேன். சியாமள நிறம் (பச்சிளம் மேனி) உள்ளவள், மான் விழியாள், சிற்று இடை உடையாள்; அழகிய புருவம் அமைந்தவள், மனோகரமான கூந்தல் உடையவள், நடை அழகி, நற்குணம் உடையவள், முல்லை அரும்பு போலும் முத்து வரிசை போன்ற ஒளியுடைய அழகான பற்களை உடையவள் ஆகிய பெண்களிடத்தில் நான் எப்பொழுதும் வாழ்ந்து வருகின்றேன்.

இனி ஆண்கள் செய்யத் தகாதவற்றையும் விளக்குகின்றேன்: பலரும் படுத்து அழுக்கோடு உள்ள கூடத்தில் படுத்தல், உடைந்த ஆசனப் பலகையை உபயோகித்தல் ஆகியவற்றை எவன் ஒதுக்கி வாழ்கிறானோ அவனுடைய விருப்பத்தை நான் பூர்த்தி செய்கின்றேன். என்னுடைய வாஸத்தை தன்னிடம் விரும்பும் மனிதன் இவற்றைக் கவனித்து நடக்க வேண்டும். அவன் கால்களினால் தீண்டத்தகாதன சில உள்ளன. அவை: மயானக்கரி, சிதையில் காணப்படும் அஸ்தி (எலும்பு) சாதாரண அக்னி, விபூதி (திருநீறு), பிராம்மணன், பருத்தி விதை, பசு, உமி, குருவின் திருவடி ஆகியவற்றை ஒரு காலத்திலும் தன்னுடைய காலினால் தீண்டுதல் கூடாது. அவ்வாறே தன்னுடைய ஒரு காலை மற்றொரு காலினால் தேய்த்து அழுக்குப்படியச் செய்து கொள்ளுதலும் கூடாது. இவற்றை எக்காலத்திலும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். தன்னிடத்தில், நான் நன்கு வாசம் புரிய வேண்டும் என்று விரும்பும் மனிதன், இங்கு நான் தெரிவிக்கின்ற விஷயங்களையும் கவனித்து நடந்து வர வேண்டும். நகம், தலை ரோமம் முதலிய சம்மந்தம் உள்ள நீரை உட்கொள்ளக்கூடாது. அத்தகைய அசுத்த நீரைக் கையினாலும் தீண்டுதல் கூடாது. சதுர்தசி அமாவாசை ஆகிய பருவகாலம், காலை, மாலை என்னும் இரு சந்திநேரம் ஆகியவற்றில் மங்கையரைப் போகம் செய்வதை மனத்தாலும் கருதாமல் ஒதுக்க வேண்டும். நிர்வாணமாக (ஆடையில்லாமல்) படுத்து உறங்கக் கூடாது. இனிய பொருள்களை தான் ஒருவனே சாப்பிடுவதும் தவறு. துடைப்பத்தால் பெருக்கப்பட்ட தூசி தன்னுடைய உடலில் படக் கூடாது. அதனுடைய காற்று உடலின்மீது பட்டாலும் வறுமையை உண்டாக்கும். ஆங்கிலி, வில்வம், விலக்கப்பட்ட சாகம், காய் கறி, விளாங்கனி, தயிர் ஆகியவற்றை இரவில் உட்கொள்ளக் கூடாது. இந்த நியமத்தைக் கடைபிடித்து வருபவரிடம் நான் எப்பொழுதும் வாழ்ந்து வருவேன்.' இன்னும் என் தயவை விரும்புபவன் தன் உடலில் தாளம்

# கண்ணன் பிறந்த காரணம்!

ஒரு சமயம் கண்ணபிரான் யமுனை நதிக் கரையில் யாரையோ எதிர்பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருக்கிறான். மாலை நேரம். திடீரென்று ஜில்லென்று காற்று வீசுகிறது. அதோ ராதை வருகிறாள்! தாவணி காற்றில் படபடக்க, வளையல் கலீரென்று ஒலிக்கக் குனிந்த தலை நிமிராமல் இடுப்பில் குடத்துடன் வருகிறாள். கண்ணனைத் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை! மிக அமைதியாக குடத்தில் யமுனா ஜலத்தைத் எடுத்துக்கொண்டு மறுபடி குனிந்தபடியே நடக்கலானாள். ராதையின் திருமுகமண்டல தரிசனத்திற்காக ஏங்கி நின்ற கண்ணனுக்கு ஏமாற்றமாகி விட்டது. கடாக்ஷமும் கிடைக்கவில்லை. பேசுவாளோ என்று பார்த்தான். அதுவுமில்லை. 'ராதே!' என்று கூப்பிட நினைத்தான். நாக்குப் புரட்டிப் பேச முடியவில்லை. தன் வசமிழந்து நின்று கொண்டிருந்த கண்ணனுக்கு ஜீவனோபாயமாக ஒன்று கிடைத்தது! கொஞ்ச தூரம் சென்ற ராதை தனது தாவணியை இழுத்து மேலே விசிறிப் போட்டுக் கொண்டபோது, காற்றில் அந்த வஸ்திரத்திலிருந்து வீசிய ப்ரேம கந்தம், பக்தி பரிமளம் கண்ணன் மீது பட்டது. தாழம்பூவை எவ்வளவு ஒளித்து வைத்தாலும் அதன் சுகந்தம் வெளிப்படையாகத் தெரிவதுபோல், ரகஸ்யமாக ராதை ஒளித்து வைத்திருந்த ப்ரேமை, வஸ்திரத்தின் நுனியில் ஒட்டி வந்த காற்றின் மூலம் கண்ணனை அடைந்தது. உடனே கண்ணன் தனது அவதாரம் க்ருதார்த்தம் ஆயிற்று என்று எண்ணினான். தன் அவதாரம் கம்சவதத்திற்காக இல்லை, ராஜசூயம் நடத்த இல்லை, கீதோபதேசத்திற்காக் கூட இல்லை. ராதையின் வஸ்த்திர நுனியின் அசைவில் வந்த காற்று தன் மேல் ஒருமுறை, படுவதற்காகவே அவதாரம் என்று கண்ணன் எண்ணினான். கோப, கோபிகள், நந்தன், யசோதை, மகரிஷிகள் பிர்மாதி தேவர்கள் எவனுடைய கடாக்ஷத்திற்கு ஏங்குவார்களோ அந்தக் கண்ணன் ராதா தேவியின் ஒரு கடாக்ஷத்திற்கு ஏங்குவானென்றால் அந்த ராதா தேவியின் பக்தி, ப்ரேம பாவம் எப்படிப்பட்டது? அத்தகைய ராதையை நாம் வணங்குவது எப்படி? கோபிகளின் முகத்தைப் பார்க்கக்கூட தனக்கு யோக்யதை இல்லையென்று உத்தமன், அவர்களது திருவடி தூளிகளை வணங்குகிறான். எனவே சென்னைக்கு வடதிசையில், பிருந்தாவனம்; அங்கு யமுனாதீரம்; அக்கரையில் 'பர்ஸானா' என்று அழைக்கப்படும் ராதாதேவியின் பிறந்த ஊரை, திசையை நோக்கி நமஸ்கரிப்பது ஒன்றே நம்மால் முடியும்!

— ஸ்ரீ ஸ்ரீ கிருஷ்ண ப்ரேமி சுவாமிகள்.

அனுப்பியவர்: ஆர். சுப்பராவ் — திருக்கோவலூர்.

போடக் கூடாது. ஆசனப் பகுதியில் தாளம் போடவோ, மிருதங்க வாத்தியத்தைப் போலவோ தட்டக் கூடாது. தன்னுடைய தலையையும் பாதங்களையும் எப்போதும் சுத்தமாய் வைத்துக் கொள்ள வேண்டும். தலையின்மீது எச்சில் கையால் தொடக் கூடாது. தினமும் குளிக்கு முன் தலையில் எண்ணெய் வைத்துக் கொள்ளக் கூடாது. (நெய், பால் கலந்திருந்தால் அத்தகைய குற்றம் பாதிக்காது) இருட்டிலும், விளக்கு இல்லாத வீட்டிலும் படுத்து உறங்கக் கூடாது. முதல் நாள் இரவு அணிந்த ஆடையை (புதிதாக இருந்தாலும்) மறுநாள் அணியக் கூடாது. கன்னங்கரேல் என்ற அழுக்கான ஆடைகளையும், கிழிந்த ஆடைகளையும் அணியக்கூடாது. விகாரமான தோற்றத்தோடு தோன்றக் கூடாது. உலர்ந்து போன பசையற்ற உணவை நீக்க வேண்டும். தன்னுடைய மார்பில் பிறரைக் கொண்டுச் சந்தனத்தைத் தேய்க்கச் சொல்லக் கூடாது. தான் அணிந்த மாலையைத் தன் கழுத்திலிருந்து தானே எடுத்து போடக் கூடாது. சோம்பலுக்கு இடம் கொடுக்கக் கூடாது. வெள்ளிக் கிழமை எண்ணெய் தேய்த்துக் குளித்தல், அமாவாசையில் வாசனைப் பொடி தேய்த்துக் குளித்தல் என்பனவும் செய்யத்தகாதன. அசுத்தமாக இருக்கும்போது நட்சத்திரங்களையும் சந்திர சூர்யர்களையும் தரிசனம் செய்யக் கூடாது. சூரியன் மலைவாயில் புகும்போது பார்க்கக் கூடாது. எவன் இந்த முறைகளை நேர்மையோடு கடைபிடித்து வருகிறானோ அவனிடம் நான் எப்பொழுதும் காட்சியாக இருப்பேன். செல்வ லாபத்தை விரும்புகிற மனிதன் பிறர் தேடி வைத்தப் பொருளிலும், பிறர் மணந்த மாதரிடத்திலும் மனதைச் செலுத்தக் கூடாது. பிறருக்குத் தீங்கு நினைப்பதும், தீமை செய்வதும் விரும்பத்தக்க செயல் அல்ல. சூரிய உதயத்திற்குப் பிறகு படுக்கையை விட்டு எழுதல் கூடாது. நகம், முள், ரத்தம் அல்லது சிவந்த பொருள், மண் கட்டி ஆகியவற்றால் தரையில் எழுதி விளையாடுதல் கூடாது. அவை நலமும் தராது. எனக்கு அவை வெறுப்பை அளிக்கும். தண்ணீர்க் கோலம் இடுதல், கரிக்கோடு திரித்தல் ஆகிய வற்றையும் தவிர்க்க வேண்டும்.

இவ்வாறு நான் மேற்கூறியவற்றை நன்றாக நினைவில் கொண்டு, எனக்குப் பிரியமானவற்றைச் செய்து வரும் ஸத்பக்தர்களுக்கு நான் அஷ்ட ஐச்வர்யங்களையும், அஷ்ட போகங்களையும் அவரவர் தகுதிக்கேற்ப பகிர்ந்தளிப்பேன்" என்று ஸ்ரீலக்ஷ்மிதேவி பகர்ந்தாள்.

இனி இந்த அஷ்ட ஐசுவரியங்கள், அஷ்ட போகங்கள் என்ன என்பதைச் சற்று நோக்குவோம்:

ராஜாங்கம் (பதவி-உத்யோகம்), மக்கள், சுற்றம், பொன், மணி (ரத்தினங்கள்) நெல், வாகனம், அடிமை (பணியாட்கள்) என்பன அஷ்ட ஐசுவரியங்கள்.

பெண், ஆடை, அணிகலன், உணவு, தாம்பூலம், பரிமளம், பாட்டு, பூவமனி என்பன அஷ்டபோகங்கள்.

'அஷ்ட' என்பது எண் வகையைக் குறிக்கும் தொகை மொழி. 'ஐசுவரயம்' என்பது தெய்வ அருளால் கிடைக்கும் தன்மையை உணர்த்தும். எனவே உலக மக்களின் தாயாகிய லக்ஷ்மி தேவியை நினைந்து, போற்றிப் புகழ்ந்து, அவளது எண் வகை உருவங்களிலும் அன்போடு மனத்தைச் செலுத்தி அவளது பிரியத்துக்கு உரிய மலரும் மணமும் அர்ப்பணித்துப் பணிவுடன் வேண்டிக் கொண்டால் அந்தவரலக்ஷ்மி வரமருளத் தயங்கவே மாட்டாள். அவளருளுண்டானால் வையம் புகழ எல்லாவகைச் செல்வங்களும் பெற்று இனிது வாழலாம்.

**அஷ்ட ஐசுவரியங்கள் விளக்கம்:**

1. ராஜாங்கம் - குறிப்பு அறிந்து அலுவல் புரியும் பணியாளர்களுக்குத் தலைமை வகிக்கும் பதவி.

2. மக்கள்-பெற்றோருக்குப் புகழ் தேடித்தரும் நன்மக்கள்.

3. சுற்றம்-தக்க சமயத்தில் உதவி புரியும் உறவினர்.

4. பொன்-சிறப்புமிக்க, நிறைந்த செல்வம்.

5. மணி - அழகும் தூய்மையும் அமைந்த ஆடை ஆபரணங்கள்.

6. நெல் - நிறைந்து குவிந்துள்ள தானியங்கள்.

7. வாகனம்-விரைந்து செல்லும் வாகனங்கள்.

8. அடிமை-மனம் போல, விருப்பத்தை அறிந்து நடக்கும் பணியாட்கள்.

**அஷ்ட போகங்கள் விளக்கம்:**

1. பெண் - அன்போடும் அழகோடும் விரும்பத்தக்க பிற நற்குணங்களும் அமைந்த மனைவி.

2. ஆடை-உள்ளத்தைக் கவரும் உடைகள்.

3. அணிகலன்-அருமையான அணிகலன்கள்.

4. உணவு-மறக்க முடியாத மனோரம்யமான உணவு.

5. தாம்பூலம்-நலம் தரும் தாம்பூலம்.

6. பரிமளம் - அற்புதமான வாசனைத் திரவியங்கள்.

7. பாட்டு-இதயத்தை மகிழ்விக்கும் இனிய இசை.

8. பூவமனி-மனம் கவரும் மணமுள்ள மலர்களால் அமைந்த படுக்கை.

இவ்வாறு அஷ்ட போகங்களையும் தினசரி வாழ்வில் அமையப் பெறுதல் எல்லோருக்கும் எளிது அல்ல.

முயற்சி உயர்வு தரும்.

*

(19-ம் பக்கத் தொடர்ச்சி)

நட்டு வைத்து இருப்பதை உணர் கிறான். தன் சந்தேகப்படி அவை நாட்டி இராத வேறு இடத்தில் குதித்து கரைஏறி தப்பித்துக் கொள் கிறான். இப்படி பாண்டவர்களில் வீமனுக்கே கண்ணபெருமானின் முதல் உதவி கிடைக்கின்றது.

அதுபோன்றே வில்லி பாரத நூலைப் பொறுத்தவரை வீமனுக்கே கடைசியாகவும் உதவி புரிகிறான் கண்ணன். போர் முடித்த பின்னர் பஞ்ச பாண்டவர்கள், இறந்துபோன அனைவருக்கும் அந்திமக் கிரியைகளைச் செய்த முடித்த பின்னர், பிறவிக் குருடனான திருதராட்டிரனை வணங்க ஐவரும் செல்கின்றனர். கண்ண னும் அவர்களுடன் செல்கிறான்.

அப்போது ஐவரும் அவனை வணங்குகின்றனர். திருதராட்டிர னும் அனைவர்க்கும் ஆசி கூறுகிறான். பின்னர் தான் வீமனைத் தழுவிக் கொள்ள வேண்டும் என்கிறான். உடனே கண்ணன் பெரியதோர் இரும் புத் தூணைக் கொணர்ந்து கொடுக்க அதைத் திருதராட்டிரன் வீம னென்று கருதிக் கட்டித் தழுவுகிறான். அது பொடிப் பொடியாய்ப் போகி றது. வீமன் தப்பித்துக் கொள்கிறான். இதனை வில்லி கூறுவார்

"அத்தினா புரியதனில் ஐவருடன்
சென்று
அரியும் அந்தன் முன்னர்
பத்தியினால் இறைஞ்சிட மற்றவர்
கொல்எனத்
தருமன் முதற்பால ரென்னத்
வித்தகனும் ஆசிசொற்றச் சதாகதி
சேயினைத்
தழுவ வேண்டு மென்ன
அத்தனத்தூண் அளித்தருளத்
தழுவி நெரித்தனன்
துகள்கள் ஆய தம்ம!"
[வில்லி-சௌப்திக-45]

இவ்விரண்டு தருணங்களிலும் பாண்டவர்கள் வேண்டாமலேயே உதவி புரிந்திருக்கிறான். அது போன்றே சூதிலேயும் அவர்கள் வேண்டாமலேயே உதவி புரிந்திருக்க லாம். ஆயின் செய்யவில்லை. அதற் குக் காரணம் பூபாரம் தீர்த்தலா?

அவன் பூபாரம் தீர்த்தல் ஒன்றி லேயே நோக்கம் உள்ளவனாய் இருப் பின், அனைவரையும் கொன்றிருக்க வேண்டும். ஆயின் பாண்டவர்களைக் காப்பாற்றுகிறான். அவ்வாறு அவன் காப்பதற்குக் காரணம் அவன் அவர் கள் பேரில் கொண்ட அன்பா? அன்று சகாதேவன் வேண்டுதலா? என்பதும் எண்ணிப்பார்க்க வேண்டிய ஒன்று.

கிருஷ்ணன் தூது செல்வதைப் பற்றிப் பற்றி ஆலோசனை செய்யு மிடத்தில், சகாதேவன் தன்னுடன் தனி யிடத்தில் பேசும் கண்ணபெருமானை யே தன் மனத்தினால் அவனைப் பிணித்து விடுகிறான். அப்போது கண்ணன் அவனை நோக்கி 'என்னை அன்பினால் பிணித்தமை நன்று. என்பாதம் தன்னை விடுக' என்று கண்ணபெருமான் வேண் டும் போது, "பாரதப் போரில் வந்து அடைந்த எம் ஐவரையும் நின் பார் வையால் காக்க வேண்டும் நெடு மாலே" என்று வேண்டுகிறான். கண்ண னும் ஒப்புக்கொள்கிறான்.

"அன்பாய் இன்றென்னை அறிந்தே
பிணித்தமை நன்று
என்பாதம் தன்னைஇனி விடுக:
என்றுரைப்ப
வன்பாரதப் போரில்வந் தடைந்தேம்
ஐவரையும்
நின்பார்வையால் காக்க வேண்டும்
நெடுமாலே!'
(-வில்லி-கிருஷ்ணன்-39)

எனபார். இதற்கு இணங்கித்தான் காப்பாற்றினானா? அன்றி உண்மை யான அன்பை பாண்டவர் பக்கம் வைத்திருந்தானா? என்பதை எண் ணிப் பார்க்க வேண்டும்.

போருக்கு முன்னர் பொய் உறக் கம் கொண்டு துரியோதனன் பக்கம் சேராமல், பாண்டவர் பக்கம் சேரு கிறான் கண்ணன். அந்த நிகழ்ச்சி ஒன்றே போதும் அவன் பாண்டவர் களிடம் கொண்ட பேரீடுபாடே அவர் களைக்காப்பாற்ற வைத்தது என்று என்று உணர்ந்து கொள்ள.

பாரதப் போருக்கு முன்னரும் அதன் பின்னரும் அவன் பல மாமா யங்கள் புரிகிறான். அதனை அவன் தன் வாயாலேயே பாஞ்சாலியிடம் கூறுகிறான். சௌப்திக பருவத்தில் 'மலர்க் குழலாய் உன்கொழுநர் வாழ் தற்கு யான் செய் தந்திரம் மற்றொரு கோடியுரைக்கு அடங்கா' (சௌப்திக 44) என்று கூறுகிறான்.

எனவே அவன் பல மாமாயங்கள் புரிந்து தன் அன்பர்களைக் காக்கிறான். இத்தனையும் செய்து அவன் அவர் களைக் காத்தது அன்பின் அடிப்படை யில்தான். இல்லையெனில் பூபாரம் தீர்த்தலே முக்கிய காரணமாய் இருந் திருப்பின் அவன் அவர்களைக் கொல் வதற்கும் வாய்ப்பிருந்தது.

பூபாரம் தீர்க்கவே அவதரித்தா லும் தருமம் செழிக்கவும், அதர்மம் அழியவும் விரும்பினான். அதனால் நல்லவர்களான பாண்டவர்கள் பக் கம் சேர்ந்து கௌரவர்கள் அழியக் காரணம் ஆகிறான்.

சகாதேவன் கூற்றுப்படி போர் வரைதான் அவர்களைக் காக்கின்ற கடப்பாடுடையவன், அதன் பின்னர் இல்லை. அதனால் அசுவத்தாமனிடம் இருந்து பாண்டவர்களைக் காத்த நிகழ்ச்சியும் எண்ணிப் பார்த்தால் அவன் அவர்களிடம் கொண்ட அன் பின் காரணமாகவே செய்திருக் கிறான் என்பது புலனாகும்.

ஆரம்பக் காலங்களில் அவன் பல விதங்களில் துணை புரிந்துள்ளான். ஆயினும் பூபாரம் தீர்க்கத் தனக்கு ஒரு துணை தேவைப்பட்டது என்று எண்ணவும் இடம் உண்டு. அவன் புரிந்த உதவிகள் அனைத்தும் அவ தார நோக்கின் அடிப்படையில் அமைந்திருந்தாலும் அதில் அன்பும் கலந்திருந்தது. அடைந்தவர்களைத் காக்கின்ற எண்ணமே அவனிடத்தில் மேலோங்கி இருந்தது எனலாம்.

பூபாரம் தீர்த்தலே அவனுடைய உண்மையான எண்ணமாக இருந் திருப்பின் பாண்டவர்கள் அழிவிற்குக் கடைசியில் வாய்ப்பு கிட்டியதைப்

## தி. தி. தேவஸ்தானத்தாரின்
# ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்

### தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

5-00 முதல் 5-30 வரை—சுப்ரபாதம்
5-30 ,, 6-00 ,, —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-00
(நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)
6-00 ,, 6-30 ,, —சுத்தி—முதல்மணி
6-30 ,, 11-30 மதியம்—ஸர்வதரிசனம்
11-30 ,, 12-30 ,, —சுத்தி, 2-வது மணி
12-00 ,, 6-00 மாலை —ஸர்வதரிசனம்
6-00 ,, 6-30 ,, —சுத்தி, 3-வது மணி
6-30 ,, 9-15 இரவு —ஸர்வதரிசனம்
9-15 ,, 9-30 ,, —சுத்தி, ஏகாந்தசேவை

### வெள்ளிக்கிழமைகளில்

காலை

9-00 ,, 10-00 ,, —அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்)
9-00 ,, 10-00 ,, —அபிஷேக தரிசனம் (ரூ. 2/- நபர் ஒருவருக்கு)

### ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

1 தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 2/- (நபர் ஒருவர்க்கு)

| ஆர்ஜித நைவேத்தியங்கள் | | ஆர்ஜித சேவைகள் | |
|---|---|---|---|
| (அ) பொங்கல் ,, | ரூ. 110/- | (அ) திருச்சி உற்சவம் | ரூ. 63-00 |
| (ஆ) புளியோரை ,, | ரூ. 100/- | (ஆ) யானை வாகனம் | ரூ. 82-00 |
| (இ) தத்யோதனம் ,, | ரூ. 75/- | (இ) தோலோற்சவம் | ரூ. 160/- |
| (ஈ) கேஸரிபாத் ,, | ரூ. 180/- | (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்) | |
| (உ) சர்க்கரைப் பொங்கல் ,, | ரூ. 135/- | (ஈ) திருப்பாவாடை (கிருஹஸ்தர்க்கு 5 கிராம் எடையுள்ள வெள்ளிடாலர் கொடுக்கப்படும்) | ரூ. 2000/- |
| (ஊ) தோசை ,, | ரூ. 300/- | (அர்ச்சனை(அஷ்டோத்ரம்)செய்ய விரும்பும் பக்தர்கள் அதற்கான ரூ. 1-50க்கான டிக்கெட்டினைக் கோயிலிலேயே வாங்கிக் கொள்ளலாம். இதுபோது பக்தரின் பெயரும், கோத்ரமும் வாசிக்கப்படும்) | |
| (எ) ஸாகரபாத் ,, | ரூ. 150/- | | |
| (ஏ) ஸீரா ,, | ரூ. 300/- | | |

* திருப்பதியிலிருந்து 5 கி. மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

பயன்படுத்தி அவர்களையும் கொன்று பூபாரம் தீர்ப்பதில் ஒரு முழுமையை அடைந்திருப்பான். அசுவத்தாமனிடமிருந்தும், திருதராட்டிரனிடமிருந்தும் அவர்களைக் காத்ததாலேயே அவனின் அன்பு மனம் வெளிப்படுகின்றது.

சூதாட்டத்திலே பாண்டவர்களுக்கு ஆரம்பத்திலேயே உதவி இருப்பின் பூபாரம் தீர்த்தல் நிகழ்ந்திருக்காது. அதுமட்டுமின்றி எக்காரியத்தைத் தொடங்கினும் எம்பெருமானைத் தொழுது துவங்க வேண்டுமென்று எண்ணமின்றிஇருந்த அவர்கட்கு அவன் எவ்வாறு உதவி புரிவது?

பாண்டவர்கட்குத் துணையாய் வந்த மாமன் மாமாயன் கண்ணன், அவர்களுக்கு அன்பின் அடிப்படையில் அருள் புரிந்து நன்மார்க்கத்தைக் காட்டித் தன் அவதார நோக்கையும் அவர்கள் மூலமாகவே நிறைவேற்றிக் கொண்டவன் ஆவான்.

கௌரவர்கள் வஞ்சகச்சகுனியைத் துணை கொண்டு அழிந்தார்கள். அம்மாமன் அவர்கட்குக் காட்டிய வழி அழிவுவழி.இரண்டு மாமன்கள் மாமாயம் புரிந்தவர்கள்.

ஆருயிர் துணையாய் நின்ற பாண்டவர் மாமனோ அன்பர்க்கு இளகும் மனம் படைத்தவன் என்பதைக் காட்டுமுகத்தான் வில்லியார் "பாண்டவர்க்கு ஆருயிர்த் துணையாய் வந்த மாமரகத வடிவோன்" (சபா-28) என்றும், 'தன்னைச் சேர்ந்தவர் இடுக்கண்ணும் இளைப்பும் ஆற்ற நின்றவன்" (சல்-128) என்றும் கூறுகிறார். கிருஷ்ணன் தூது சருக்கத்தில் "மாயவனும் அன்பன் மனமறிவான்" என்று சகாதேவனிடம் அமைத்துப் பாடுகின்றார்.

இக்காரணங்களால் பாண்டவர் சகானாய் வந்த மாமன் மாமாயன் கண்ணன், அவதார நோக்கிற்குப் பல செயல்கள் புரிந்தாலும், தூய உள்ளத்தின் அன்பின் காரணமாகவே உதவினான் என்பதே முற்றிலும் உண்மை. ★

# வைணவ வினா - விடை

வித்வான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ். தாதாசார்யர்.

**சிற்பம் பற்றிய சிறு குறிப்பு என்ன?**

சிற்பநூல்களில்'விச்வகர்மீயம் முதல் ஸௌரம் வரை 32 ப்ரதான நூல்கள் உண்டு என்பர். சில்பம் என்ற சொல்லுக்கு - சிற்பியின் செயல், த்யானம். 64 கலைகள் என்ற பொருள்கள் உண்டு. ஸ்ரீதேசிகன் "வித்யா சில்ப ப்ரகுணமதினு" என்ற செய்யுள் அடியால், சில்பம் வித்யாஸ்தானங்களில் ஒன்று எனவும் அருளினார். மற்றும் ஸ்ரீதேசிகன் நாமரூபே வ்யாகர வாணி என்ற வேதவாக்யப்படிக்கு இந்தப் பிரபஞ்சத்தை,இவ்வளவுவிசித்திரமாகப்படைத்த திருமாலையும் ஒரு வைகுண்டச் சிற்பி என்றார். சிலையில் அழகுக்காகச் செய்யும் வேலைகள் அனைத்தையும் சிற்பம் என்று பொதுவழக்கில் இன்று அழைப்பதுண்டு. அப்பொழுது சிலை என்ற சொற் பொருள்களாகிய கருங்கல், நிலையின் கீழ்ப்படி, மனோநிலை என்பவைகளில் "மனோநிலை" என்ற கருத்தைக் கொண்டு, அர்ச்சாபிம்ப அமைப்பும் சிற்பின் 'மனோநிலை'யைப் பொறுத்தது என அறியலாம். சிற்பக்கலையின் பூர்ணத்வம் ஒரு சிலையில் ஏற்பட்டால் அந்தச் சிலையும் உயிர் பெற்று விடும்.இதற்கு வாய் வழி வந்த ஒரு நிகழ்ச்சிக் குறிப்புண்டு.

முன்பு ஒரு சிறந்த சிற்பி கருடமந்திரம், தந்த்ரம் இவைகளுக்கிணங்க, ஒரு கருடன் சிலையை வடித்தார். ஆழ்வார்களின் அருளிச் செயல் இணங்க அக்கருடனின் மூக்கின் அடியில் வலப்புறத்தில் ஒரு சிறு துவாரமும் ஏற்படுத்தி (கருடவாகனம் செய்யும் பொழுது விஷய மறிந்தவர்கள், கருடனின் மூக்கின் அடியில் மச்சம் போன்ற ஒரு அடையாளம் ஏற்படுத்துவர். இதற்குப் புராணக்கதை அடிப்படையாகும்) முடித்தார். அதில் கலையின் ஸ்பூர்த்தி ஏற்பட்டிருந்தபடியாலும் சிற்பியின் நியம நிஷ்டை, பக்தியாலும் அக்கருடன் உடனே வானில் எழும்பிப் பறக்கத் தொடங்கிற்று. உடனே பயந்த சிற்பி அந்த ஸ்பூர்த்தியைக் குறிக்க வானில் தன் கைஉளியை வீச, அது கருடனின் சிறகில்பட உடனே கீழே இறங்கிற்று. அந்தக் கருடன்தான் நாச்சியார் கோயில் கல் கருடன் எனக் கூறுவர்.

கி. பி. 2-ம் நூற்றுண்டில், சிற்பக்கலையின் வளர்ச்சி உச்சநிலையில் இருந்தது. இச்சிற்பத்தில், குஷானியமுறை, சாதவாஹன முறை என்ற இரண்டும் சிறந்தவை. பிறகு சோழர், பல்லவர், பாண்டியர், நாயக்கர் இவர்களின் காலங்களிலும் சிற்பக்கலை சிறப்புற்றது. சுக்கிரநீதி என்ற நூல், சிற்பங்களில் கவர்ச்சியும், அழகும் இருக்கவேண்டியதுதான். ஆனால் அதுவே முக்கியமல்ல. அந்தச் சிற்பங்கள் ஆகமங்கள் மற்றும் சிற்ப நூல்களில் கூறியபடிக்கு லக்ஷணங்கள் பொருந்தி இருக்கவேண்டும் எனக் கூறிற்று.

முற்காலத்தில் இறைவனது வடிவம் மற்றுமுள்ள உபதேவதைகளின் வடிவம், கோயில் கோபுரம், தூண், விட்டம் இவைகளில் வடிவங்கள் முறைப்படி அமைப்பார்கள். ப்ரதான விக்கிரகம் வார்க்கக் கையாண்டமுறையை மெழுகுமுறை என்பார்கள். ஆண்டாள் அருளிச் செயல் ஒன்றில் உவமை வாயிலாக இம்மெழுகு முறை காட்டப்பட்டது. நாச்சியார் திருமொழி 11-ல் "மழையே மழையே" என்ற பாசுரத்தில் வரும் "மெழுகூற்றினாற் போல் ஊற்று நல் வேங்கடத்துள் நின்ற" என்ற அடியில் இந்த மெழுகு முறை உவமையில் காட்டப்பட்டுள்ளது. இந்த முறையாவது முதலில் கருதிய பிம்பத்தின் சுத்தமான சாஸ்த்ரியமான லக்ஷணங்கள் யாவும் அமைந்த நல்ல ஒரு உருவத்தை மெழுகினால் உருவாக்கிப் பின் அதன்மேல் தரமான களிமண்ணை, மணல் கலப்பின்றி, அந்தப் பிம்பத்தின் மேல் பூசி, அச்சுவார்ப்பு அமைப்பார்கள். பின்னர் உள்ளே உள்ள மெழுகை மெதுவாக உருக்கி விடுவார்கள், கடைசியில், களிமண் அச்சு மிஞ்சி இருக்கும். அதற்குள் பஞ்ச உலோகத்தை உருக்கி விடுவார்கள். இது ஒரு வகையான பிம்பம் வார்க்கும் முறை. முன்பு இதே முறையைத்தான் கிரேக்கர்களும் சீனர்களும் கையாண்டனர். கி. மு. 4500 முதல் கி.மு. 252 வரை பண்டைய எகிப்தியர் சிற்பக்கலையை மிகவும் பேணி வந்தனர்.

சுவயம்வ்யக்த க்ஷேத்திரத்தில் எழுந்தருளியிருக்கும் திருமாலின் திருமேனியில் எதிர்பாராத வகையில், பின்னமோ, தீயின் தாக்குதலோ தற்செயலாய் ஏற்பட்டிருக்குமானால்,திருமேனியின் வனப்புக் குறையுமோ?அல்லது அருட்சக்தி குறையுமோ? எனக் கருதி, அந்தப் பிம்பத்திற்கு மறுபடியும் சுத்தி ஸம்ப்ரோக்ஷணை செய்யவேண்டியதில்லை என்பார்கள். இந்த பிம்பங்களை ஒரு மின்கலப் பெட்டிக்கு ஒப்ப அருட்சக்தியின் தேக்கம் தோய்ந்த இடமாகவே எண்ண வேண்டும்.

பொதுவாக ஆலயங்கள், கோபுரங்கள், விமானங்கள், இறைவன் திருமேனிகளில் மந்திர சக்திகள் அடைக்கப்பட்டு மக்களின் கண்கள் வழியாக அவர்கள் உள்ளத்திலும் வாழ்விலும் அந்த மந்திர சக்திகளை உத்ஸவ பிம்பங்கள், விமானத்தில் உள்ள தாமிரக் கலசங்கள் மூலமாகப் பாய்ச்சும் நோக்கம் பெற்றவைகளே.

**திருமாலின் திருமேனி அமைப்பின் வகைகள் எவை?**

இன்றளவில் தமிழ்நாட்டில்தான் ஆலயங்களும் ஆகமவிதிகளும் அதிகம். இந்த ஆலயங்கள் பெரும்பாலும் கற்றளிகளே. சில திருமால் திருப்பதிகளின் கருவறைப் பகுதிகள் பாராங்கல் போல் மிக வலுவான செங்கற்களாலும் கட்டப்பட்டிருக்கும். திருமால் தமிழ் வழக்குப்படி முல்லைத்திணைக் கடவுளான படியால் திருமால் ஆலயங்கள் ஆற்றங்கரை ஓரங்களிலும், காடுகளிலும், அடர்ந்த சோலைகளிலும் அமைக்கப்பட்டிருக்கும். அதனால்தான் இந்த ஆலயம் இந்த மரச்சோலைகளில் கட்டப்பட்டது என அறிய தல விருக்ஷங்கள் எனவும், அந்தக் கோவில் கட்ட நீருக்காகவும், மண்ணுக்காகவும் வெட்டப்பட்டக் குளங்களைப் புஷ்கரிணிகள் எனவும் வழங்குவார்கள். இப்புஷ்கரிணிகள் ஆலயத்துக்கு முன்புறம், ஆலயத்துக்குப் பின்புறம், ஆலயத்தின் உட்புறம், சற்றுத் தொலைவிலும் வெட்டப்பட்டிருக்கும்.புஷ்கரிணி என்றால் புனிதக் குளம் எனப் பெயர்.

திருமால் ஆலயங்களில் உத்திரமேரூர், மன்னார் கோயில், திருக்கோட்டியூர், மதுரைக் கூடலழகர். சன்னிதிகளின் மேல் உள்ள விமானங்கள் அஷ்டாங்க விமானங்களாகவும் இருக்கும். திருக்கோட்டியூர், புருஷோத்தமர் கோயில் போன்ற இடங்களில் கோவிலுக்குள் சிவபெருமான் லிங்கம் முதலியனவும் அமைக்கப்பட்டிருக்கும்.

திருமால் ஆலயங்களுக்குள் கர்ப்பக்ருஹம், அர்த்தமண்டபம், மஹாமண்டபம், வாத்யமண்டபம், நிருத்தமண்டபம் என்பன வரிசையாக அமைந்திருக்கும். மனிதன் உடல் அமைப்பு, உள் அமைப்பு இவைகளில் உள்ள ஸப்த தாதுக்கள், பஞ்சகோசங்கள் இவைகளின் அமைப்புகளுக்கிணங்க முறையே இச்சுற்றுகள் 5 அல்லது 7 ஆக இருக்கும். இடத்திற்குத் தக்கவாறு இவைகள் பாறைகள் செங்கற்கள் முதலியவைகளால் அமைந்திருக்கும். விமானங்கள் பிரணவாக்ருதி விமானம், ஆநந்த நிலைய விமானம், புண்யகோடி விமானம் என்ற வகையில் பெயர்களுடன் அமைந்திருப்பது போல் புஷ்கரிணிகளுக்கும் திருப்பெயர்கள் சூட்டப்பட்டிருக்கும். திருமால் ஆலய மதில்களில் பெரும்பாலும் கைகூப்பி அமர்ந்த கருடன்களின் பிம்பங்கள் அடையாளச் சின்னமாக அமைக்கப்பட்டிருக்கும். தலபுராண ரீதிகளில் இந்த வடிவங்கள் சில ஆலயங்களில் மாறுபட்டிருக்கலாம். உதாரணமாகத் திருமலையில் கர்ப்பக்ருஹச் சுற்றின் மதில் மேல் சிங்க வடிவங்கள் இருக்கும். "விஷ்ணு: பர்வதானாம் அதிபதி" என்ற வேத வாக்கியப்படிக்கு, அழகர்மலை, திருமலை, திருநீர்மலை சோளிங்கர் போன்ற திருமால் ஆலயங்கள் மலைகளின் மேலும் சமைக்கப்பட்டிருக்கும்.

(தொடரும்)

# வால்மீகி திருவுள்ள விளக்கு

## ஸ்ரீ காஞ்சீ காதி அனந்தாசாரியஸ்வாமி அருளிய வால்மீகி பாவ தீபத்தின மொழிபெயர்ப்பு

இனி ஐந்தாம் காரணம் 'ஸர்வ லோகாதிபத்வாத்' என்பது. எல்லாவுலகிற்கும் இயற்கையாகவே ஸ்வாமியாக இருப்பதனுல் என்று இதன் தேர்ந்த பொருள். (ஸ்வர்மி, சேஷன் தலைவன் என்றபடி) கௌஷீதகீ ப்ராஹ்மணோபநிஷத்து மூன்ருமத்தியாயத்தில் 66, 'இவன் உலகங்களைக் காப்பவன் இவன் உலகங்களுக்குத் தலைவன் இவன் எல்லோரையும் அடக்கியாளுமவன்' என்று எல்லாவுலகிற்கும் ஸ்வாமியாக இருத்தலென்பது பரப்ரஹ்மத்திற்குள்ள தனிப்பட்டதொரு தன்மையாகக் கேட்கப்பட்டது. ப்ருஹதாரண்யகம் ஆருமத்தியாயம் நான்காம் ப்ராஹ்மணத்தில் 22, '(இவன்) எல்லோரையும் தன் வசத்தில் வைத்திருப்பவன் எல்லோரையும் அடக்கியாளுமவன் எல்லோருக்கும் ஸ்வாமியானவன்' என்றும், 'இவன் எல்லோரையும் நியமிப்பவன் இவன் பிராணிகளுக்கு ஸ்வாமி இவன் பிராணிகளைக் காப்பவன்' என்றும் பரப்ரஹ்மத்தின் வேறு பெயராலே லோகங்களுக்கு ஸ்வாமியாயிருத்தலும் எல்லோருக்கும் ஸ்வாமியாயிருத்தலும் அறியப்பட்டுள்ளது. அத்தகைய இந்த ஸர்வ லோக ஸ்வாமித்வ மானது இங்கு 'தேவர்கள் இராவணனிடமிருந்து தமக்கு ரக்ஷணத்தை விரும்பிய இச்சமயத்தில், பேரொளி படைத்தவரும் சங்கு சக்கர கதைகளைத் திருக்கைகளில் ஏந்தியவரும் பீதகவாடையணிந்தவரும் எல்லாவுலகங்களுக்கும் ஸ்வாமியானவரு மான விஷ்ணு (வைகுந்தத்திலிருந்து) அவர்களருகில் வந்தார்' (ரா. பால-15-16) என்று விஷ்ணுவுக்குச் சொல்லப்படுகிறதாய்க் கொண்டு அவருக்குப் பரப்ரஹ்மத்வத்தை நிலைநாட்டுகிறது. உலகங்கட்கு ஸ்வாமியாயிருத்தலென்பது பரப்ரஹ்மத்திற்கே உள்ளதொரு தனிப்பட்ட தன்மையாகும்.

ஆகையினுல்தான் சாரீரகம் (ப்ரஹ்ம ஸூத்ரம்) முதலத்தியாயம் மூன்ரும் பாதம் அர்த்தாந்தரத்வா திவ்யபதேசாதிகரணத்தில், 'ஆகாசமென்று ச்ருதிகளில் ப்ரஸித்தமான பொருள் நாம ரூபங்களை நிர்வஹிக்குமது. அந்த நாம ரூபங்களை விட்டு எது உள்ளதோ அதுவே ப்ரஹ்மம். அதுவே மரணமற்றது அதுவே ஆத்மா' (ச்சாந்தோக்யம்-8-14-1) என்ற விடத்தில் ஆகாச சப்தத்தினுல் குறிக்கப்பட்டவன் முக்தியடைந்த ஜீவாத்மாவா அல்லது பரமாத்மாவா என்று ஸந்தேஹித்து, முக்தாத்மாதானென்று ஆட்சேபம் செய்து, நாம ரூபங்களை நிர்வஹிக்குந்தன்மை-அதாவது ஸ்ருஷ்டி காலத்தில் உலகப் பொருள்களின் உருவங்களைப் படைத்து அவற்றிற்குப் பெயரிடுந்தன்மை கேட்கப்படுவதனுல் ஆகாச சப்தத்தினுல் குறிக்கப்பட்டவன் பரமாத்மாதானென்று 'ஆகாச:- அர்த்தாந்தரத்வா திவ்யபதேசாத் (ப்ரஹ்ம ஸூத்ரம் 1-3-42) என்ற ஸூத்ரத்தினுல் ஸித்தாந்தம் செய்து, அதற்கு மேலும் - ஆத்மா என்ருல் ஜீவாத்மாவே அதைவிட வேறுபட்டதோர் ஆத்மா இல்லையாகையால் ஆகாச சப்தத்தினுல் குறிக்கப்பட்டவன் ஜீவனைக் காட்டிலும் வேறல்லன் என்று மறுபடியும் மற்ருேர் ஆட்சேபத்தைக் கிளப்பி, 'ஸுஷுப்த்யுத்க்ராந்த்யோ: பேதேந' (ப்ரஹ்ம ஸூ 1-3-43) என்ற ஸூத்ரத்தினுல்- 'ஸர்வஜ்ஞனுன பரமாத்மாவால் ஆரத் தழுவப்பட்டவனுய் வெளியிலுள்ள எப்பொருளையும் உள்ளேயுள்ள பொருளையும் அறிய மாட்டான்' (ப்ருஹ 6-3-21) என்றும், 'ஸர்வஜ்ஞனுன பரமாத்மாவால் (ஸாரதியினுல் தேர் போல) ஏறப்பெற்றவனுய்ச் சரீரத்தை விட்டுச் செல்கிருன்' (ப்ருஹ 6-3-35) என்றும் முறையே ஆழ்ந்த தூக்க நிலையிலும் மரண நிலையிலும் ஜீவனுக்கு அணைக்கப்பெறுதலும் ஏறப்பெறுதலும் கேட்கப்படுவதனுல் அணைப்பவனும் அணைக்கப்படுமவனும் வேறுவேறென்று குறிக்கப்படுவதிலிருந்து (ஆகாச சப்தத்தினுல் குறிக்கப்பட்டவன்) ஜீவனைவிட வேறுபட்ட பரமாத்மா ஒருவன் நிச்சயமாக உள்ளா

தமிழாக்கம் :
திரு தி. அ. கிருஷ்ணமாசாரியர்,
சிரோமணி வித்வான்
திருப்பதி.

னென்று ஸித்தாந்தம் செய்து இன்னெரு காரணத்தாலும் ஜீவனைவிட வேருன பரமாத்மா உண்டென்று சாதிப்பதற்காக, 'பத்யாதி சப்தேப்ய:' (ப்ரஹ்மஸூ 1-3-44) என்னும் ஸூத்ரத்தில் வ்யாஸ பகவான் உலகங்கட்கெல்லாம் ஸ்வாமி யாயிருத்தலையும் பரமாத்மாவிற்கே ஏற்பட்டதோர் தனித்தன்மையாகக் குறிப்பிடுகிருர்.

அவ்விதமாகவே அங்குள்ள ஸ்ரீ ராமானுஜபாஷ்யம் உள்ளமை காண்க—''இந்த அணைத்துக்கொள்ளும் பரமாத்மா மேலே பதி(ஸ்வாமி) முதலிய சொற்களினுல் குறிப்பிடப்படுகிருன் — 'எல்லோரையும் தன்

# திருமலையில்
## தி. தி. தேவஸ்தான
# காட்டேஜ் கட்டண விவரங்கள்

| காட்டேஜ் விவரம் | கட்டணம் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|
| டி. பி. சி. | ரூ. 25/- ரூ. 15/- ரூ. 10/- |
| டி.பி.சி. 3வது வரிசை (ஹீட்டர் இல்லாதது) | ரூ. 10/- |
| ஹில் வ்யூ டீலக்ஸ் காட்டேஜ் | ரூ. 20/- |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதி பெரியன | ரூ. 40/- |
| ,, ,, சிறியன | ரூ. 20/- |
| ஹில் வ்யூ காட்டேஜ் | ரூ. 10/- |
| சங்கு மிட்டா காட்டேஜ் | ரூ. 20/- |
| சேஷாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| அஞ்சனத்ரி காட்டேஜ் | ரூ. 20/- |
| கருடாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| திருமணக்கூடம் (3-வது சத்திரம்) | ரூ. 15/- |
| சிறப்பமைப்பு கொண்ட காட்டேஜ்கள் | ரூ. 75/- |
| டி. சி. சி. (உள்ளே உள்ள காட்டேஜுகள்) | ரூ. 50/- |

**எஸ். வி. விருந்தினர் விடுதி**

| | |
|---|---|
| பெரிய அறைத்தொகுதிகள் | ரூ. 50/- |
| மூலை அறைத்தொகுதிகள் | ரூ. 40/- |
| சிறிய அறைத்தொகுதிகள் | ரூ. 35/- |
| எச். ஆர். ஜி. காட்டேஜுகள் | ரூ. 150/- |
| 'மோடி பவன் | ரூ. 100/- |

**திருமணக்கூடங்கள் (காட்டேஜுகள்)**

| | |
|---|---|
| பாலாஜி காட்டேஜ் | ரூ. 500/- |
| ரூயா காட்டேஜ் எண். 248 | ரூ. 80/- |
| கோகினேனி காட்டேஜ் எண். 226 | ரூ. 80/- |
| சி. சி. காட்டேஜ் எண். 237 | ரூ. 100/- |
| எஸ். எம். சி. கிழக்கு எண். 272 | ரூ. 50/- |
| ஏ. டி. சி. எண். 99 | ரூ. 80/- |
| டி. பி. (உள்பக்க காட்டேஜ்) | ரூ. 50/- |
| டி. பி. வி. வி. சி. | ரூ. 50/- |
| டி. பி. காட்டேஜ் (தனிச் சிறப்புக் கொண்டது) | ரூ. 75/- |
| ஏ. டி. சி. மற்றும் டி.பி.சி. ஒரு அறைத்தொகுதி ஹீட்டர் உள்ளது | ரூ. 15/- |
| ஹீட்டர் இல்லாதது | ரூ. 10/- |

வசத்தில் வைத்திருப்பவன் எல்லோரையும் அடக்கியாளுமவன் எல்லோருக்கும் அதிபதியானவன், அவன் நல்ல காரியம் செய்து அதனுல் உயருமவனல்லன் கெட்ட காரியம் செய்து அதனுல் தாழுமவனுமல்லன், இவன் ஸர்வேச்வரன் (எல்லோரையும் நியமிப்பவன்) இவன் பிராணிகளைக் காப்பவன் இவன் உலகங்களை ஒன்றுக்கொன்று கலசாதபடி தரித்து நிற்கும் அணையாக உள்ளவன், அத்தகைய இவனை ப்ராஹ்மணர்கள் வேத மோதியும் யாகங்கள் செய்தும் உண்டி சுருக்கலென்னும் தவம் செய்தும் அல்லது பலனில் விருப்பமில்லாமல் தவம் செய்தும் அறிய விரும்புகிறுர்கள். இப்பரமாத்வாவை அறிந்தே ஒருவன் யோகியாகிறுன். காணத்தக்க இவ்வாத்மாவையே ஆசைப்பட்டுத் துறவிகள் துறவு பூண்டொழுகுகிறுர்கள். பெரியவனும் பிறப்பற்றவனும் ஆத்மாவானவனும் அன்னமளிப்பவனும் செல்வம் தருமவனும் மூப்பு மரணம் பயம் இவையில்லாதவனுமாகிய இப்பரமாத்மாவே ப்ரஹ்மமாகிறுன்' (ப்ருஹதாரண்யகம் 6-4-22, 24, 25) என்று இந்த பதியா (ஸ்வாமியா)யிருக்கும் தன்மை உலகங்களைத் தாங்கி நிற்கும் தன்மை அனைவரையும் அடக்கியாளும் தன்மை முதலான பண்புகள் ஜீவாத்மாவினிடம் முக்தியடைந்த நிலையிலும்கூட எவ்வாற்றுனும் பொருந்துவனவல்ல' என்பதே பாஷ்ய ஸ்ரீ ஸூக்தி.

இத்தகைய ஜகத் ஸ்வாமித்வம் - 'இவன் எல்லோருக்கும் ஸ்வாமி தனக்கும் தானே ஈச்வரன் அழிவில்லாதவன் சுத்தியுடையவன் தனது தன்மைகளிலிருந்து நழுவாதவன் அல்லது தன்னையடைந்தோரை நழுவவிடாதவன் நாராயணன் அறியத்தக்க பொருள்களில் மிகவுயர்ந்தவன் எல்லாவற்றிற்கும் ஆத்மாவானவன் அடையத் தக்கவற்றுள் உயர்ந்தவன்' (தைத். நாரா. 11-25) என்றும், 'வைகுண்டமென்னும் சிறந்த உலகின்

# புகழ்பாடும் புதிய பெயர்கள்

ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ ரங்கராஜன் (உற்சவர்) ஒரு சமயம் முஸ்லீம் ஆட்சியின் படையெடுப்பின் காரணமாக டில்லிக்குச் சென்று விட்டார். அதாவது டில்லிக்குக் கொண்டுசெல்லப்பட்டார். அங்கு பாதுஷாவின் அன்பு மகளின் மோக வலையில் மூழ்கி பூலோகத்தையே மறந்து இருந்தார். நீண்ட நெடுங்காலத்துக்குப் பின் ஒருவாறு மயக்கம் தெளிந்து ஊர் திரும்பினர், துலுக்க நாச்சியார் என்ற அந்தப் புதிய நாயகியுடன். ஸ்ரீரங்கம் மக்களுக்கு திரும்பி வந்தவர் நம் பெருமாள் தானா என்ற ஐயம் பிறந்தது. அது மட்டுமல்ல அது பூதாகாரமாயும் வளர்ந்தது. இரண்டாவது அல்லது மூன்றாவது தலைமுறையைச் சார்ந்தவர்களே அப்போது அங்கு இருந்தனர். முதியவர்களைக் காண முடியவில்லை. அந்த நேரத்தில் நம்பிக்கை நட்சத்திரம் ஒன்று அங்கு பளிச்சிட்டது. அவ்வூர் சலவைத் தொழிலாளிதான் அது. அவன் சிறு வயது முதல் பெருமாளின் ஆடைகளை ஆற்றில் துவைத்து ஆலயத்துக்கு வழங்குவது அன்றாட வழக்கம். ஆனால் இன்று வயது முதிர்ச்சியின் விளைவால் தன் கண் பார்வையும் இழந்து தன் தொழிலையும் இழந்து விட்டிருந்தான். மக்கள் அவனிடம் சென்று தோன்றியுள்ள பிரச்சினையைத் தெரிவித்தனர். பின் அவன் ஆலோசனைப்படி பெருமாளின் திருமஞ்சன ஆடைகளை அவனிடம் அளிக்கப்பட்டன. அவைகளைப் பெற்றதும் அவன் "நம் பெருமாள் தான்! நம் பெருமாள்தான்! நம் பெருமாள்தான்"! என்று மும்முறைக் கூவி முழக்கமிட்டான். (மேலும் அவன் கூறினான்) "ஆடையில் அதே பரிமளம் வீசுகிறது! நம் பெருமாளுக்கே உரிய பரிமளம் இதுதான்! என் அறுபது ஆண்டு அனுபவங்கொண்டு இதை நான் அழுத்தமாய் கூற முடியும்". 'பரிமளரங்கன்', 'நம் பெருமாள்', என்ற மேலும் இரு புதிய பெயர்கள் அன்றுமுதல் ரங்கன் புகழ் பாடத் தொடங்கின.

**திருக்கோவலூர் — ஆர். சுப்பராவ்.**

கண் இவ்வுலகனைத்துக்கும் பதி (ஸ்வாமி)யானவரும் இத்தன்மையதென்று யோகிகளாலும் அறிய முடியாத ஸ்வரூப முடையவருமான விஷ்ணுவானவர் ஸ்ரீமஹா லக்ஷ்மியோடு கூடியவராய், தம்மைக் கண்டு அனுபவிக்கும் பக்தர்களோடும் தமக்குத் தொண்டு புரியும் பாகவதர்களோடும்கூட எழுந்தருளியிருக்கிறார்' (லிங்க புராணம்) என்றும் இவை முதலிய மற்ற ச்ருதி ஸ்ம்ருதிகளிலும் கூறப்பட்டிருக்கிறது. ஆகவே இந்த ஜகத் ஸ்வாமித்வமென்னும் காரணமானது விஷ்ணுவுக்குப் பரப்ரஹ்மமாந் தன்மையைச் சாதித்தே தீருமென்பது தேறிற்று.

இனி ஆறாவது காரணம் 'வைகுண்டாதீச்வரத்வாத்' என்பது. ப்ரக்ருதி மண்டலத்தைக் கடந்து மேலேயுள்ளதும் பரமாகாசமென்று சொல்லப்படுவதும் முக்தி பெற்றவர்களால் அடையப்படுவது மாகிய வைகுண்டமென்பதோர் உலகத்துக்கு ஸ்வாமியாக இருப்பதனால் என்பது இதன் பொருளாகும். வைகுண்ட லோக ஸ்வாமித்வமென்ற இக்காரணமானது, மோக்ஷத்தையளித்தலென்னும் ப்ரஹ்மத்திற்கே உரியதான தன்மையை விட்டுப் பிரியாததாய்க் கொண்டு தானிருக்கும் பொருளின் கண் பரப்ரஹ்மமாந் தன்மையை அறிவிக்கின்றது. மோக்ஷமென்பது வைகுண்டத்தை அடையாமல் சித்திப்பதொன்றல்லாமையால் அவ்வைகுந்தத்தின் ஸ்வாமியைத் தவிர வேறொருவரிடம் மோக்ஷமளித்தலென்ற தன்மை பொருந்தாதபடியால் வைகுண்டஸ்வாமித்வம் மோக்ஷமளித்தலென்னும் தன்மையைவிட்டுப் பிரியாததாகும்.

'தமேவ ஹத்வா ஸபலம் ஸபாந்தவம் விராவணம் ராவண மக்ர்ய பௌருஷம்| ஸ்வலோக (ஸ்வர்லோக)மாகச்ச கதஜ்வர: சிரம் ஸுரேந்த்ர குப்தம் கததோஷகல்மஷம்‖ (ரா.பால.15-13) நித்யஸூரிகள் தலைவரே எல்லோரையும் நன்றாக அழச் செய்பவனும் உயர்ந்த பராக்ரம முடையவனுமான அவ்விராவணனையே படையுடனும் உற்றாருடனும் அழித்துக் கவலை நீங்கப் பெற்றவராய், அழியாததும் பிறரால் அடைய முடியாதபடி (உம்மால்) காப்பாற்றப்பட்டதும் விருப்பு வெறுப்பு முதலிய குற்றமாகிய அழுக்கற்றதுமான ஸ்வலோகத்தை (ஸ்வர்லோகத்தை)—உமது லோகமான ஸ்ரீவைகுண்டத்தை வந்தடையக்கடவீர்.

இதன் விளக்கம்-ஹேஸுரேந்த்ர= ஸுரர்களான நித்ய ஸூரிகளுக்கு ஸ்வாமியே. குப்தம்=தேவர் அசுரர் முதலியவர்களால் அடைய முடியாதது. 'மஹாத்மாவான விஷ்ணுவினுடைய—சூரியன் அக்நி இவர்களின் ஒளியை விஞ்சிய ஒளியையுடைய அந்த வைகுண்டமென்னும் ஸ்தானமானது தனது இயற்கையான பேரொளியினால் தேவர்களாலும் அசுரர்களாலும் கண்கொண்டு காண முடியாததாகும்' (பார-வன. 163-19) என்று கூறியபடியே தேவாசுரர்களால் காணவும் முடியாததென்றபடி. ஸ்வ: லோக:—ஸ்வலோக:= தன்னுடையதான வைகுண்டலோகம். வந்தடையக் கடவீர்=திரும்பி வந்து சேரக்கடவீர்.

ஸ்வலோகமென்பதனுல் சொல்லப் பட்ட லேகம்—பரமபதம் பரந்தாம பரமாகாசம் என்றிது போன்ற சப் தங்களால் குறிக்கப்பட்ட வைகுண்ட லோகமாகும். 'அந்த விஷ்ணுவினு டைய பரமபதத்தை நித்ய ஸூரிகள் எப்போதும் கண்டுகொண்டிருக்கின் றனர்' (ஸுபாலோ-6) என்று இவை தொடக்கமான ச்ருதி ஸ்ம்ருதி களாலே பரமபதமென்னும் வைகுண்ட லோகம் விஷ்ணு பக வானுடையதாகச் சொல்லப்பட் டமை காண்க. ஸ்வஸ்ய லோக: (ஸ்வாமியான தனது லோகம்) என்ற வ்யுத்பத்தியாலே ஸ்வலோக சப்த மானது—லோக சப்தத்தினுல் குறிக் கப்பட்ட வைகுண்டத்திற்குப் பக வான் ஸ்வாமியாயிருத்தலைத் தெரி விக்கின்றது.

ஸ்வர்லோகமென்ற பாடங்கொண் டாலும், ஸ்வர்லோக சப்தம் வைகுண்டமென்று பொருள்படுதலா லும், அவ்வைகுண்டம் பகவானே ஸ்வாமியாகக் கொண்டமை வேறு ச்ருதியின் மூலமாக அறியப்பட்ட தனுலும், 'குப்தம்' என்றவிடத்தில் 'த்வயா' என்பதனைச் சேர்த்தால் அது ஸ்வாமியான உம்மால் மறைத் துக் காக்கப்பட்டதென்று பொருள் படுவதனுலும் அப்பாடத்தில் பகவா னுக்கு வைகுண்ட ஸ்வாமித்வம் புலப் படுதல் அறியத்தக்கது. 'ஸுரேந்த்ர குப்தம்' என்று ஒரே பதமாகக் கொண்டால், அது ஸ்வர்லோகத் திற்கு அடைமொழியாகையால் அப் போது ஸுரேந்த்ர சப்தம் நித்ய ஸூரி கள் தலைவனுன பகவானைக் கூறு மாகையால் அப்பகவானுலே காக்கப் பட்டதென்னும் பொருள்பட்டு அத னுல் பகவானுக்கு வைகுண்ட ஸ்வா மித்வம் தானே விளங்குமென்றும், ஸுரேந்த்ர சப்தத்தினுல் நித்ய ஸூரி களில் உயர்ந்தவனுன சேனை முதலி யாரைக் கொண்டாலோவென்னில், அவரால் காக்கப்படுந்தன்மை பக வானுடைய லோகமான வைகுண்டத் திற்கேயல்லாமல் வேறெரு லோகத் திற்கு உள்ளதாகப் பிரசித்தியில்லா மையால் அவ்வைகுண்டம் பகவானை ஸ்வாமியாகக் கொண்டுள்ளமை அருத்தாபத்தியால் பெறப்படு மென்றும் அறியத்தக்கது. (அருத் தாபத்தியாவது—சொல்லியதைக் கொண்டு சொல்லாததையறிதல். இங்கு, பரமபதத்திற்குச் சேனை முதலி யாரால் காக்கப்படுந்தன்மை சொன் னதைக் கொண்டு அதற்கு, அவருக் கும் தலைவரான பகவானை ஸ்வாமி யாகக் கொண்டுள்ளமையை அறித லாகும். பகவானுடைய சொத்தல் லாததை அப்பகவான்தனக்கே யுரிய தொண்டரான சேனை முதலியார் காக்கமாட்டாரன்றே?)

இங்கு, 'ஸ்வர்லோகமென்பது ஸ்வர்க்கமேயாதலால் ஸ்வர்க்க சப் தம் பிரசித்தமான இந்திரலோக மென்ற பொருளிலேயே பிரசித்தமாக வழங்கப்படுவதனுலும், 'ஸுரேந்த்ர குப்த'மென்பது ஸ்வர்லோகத்திற்கு அடைமொழியாகையால் அதிலுள்ள ஸுரேந்த்ர சப்தத்திற்கு சசீபதி யாகிய தேவேந்திரனிடத்திலேயே அதிகமான ப்ரயோகம் இருப்பதனுல் சசீபதியால் காக்கப்படுந்தன்மை பிர சித்தமான இந்திர லோகத்திற்கே பொருந்துமாகையாலும், இங்கு ஸ்வர்லோகமென்பதனுல் வைகுண்ட மென்னும் லோகம் தோன்ருது' என்று ஆட்சேபித்தல் தகாது. ஏனெனில், ஸ்வர்லோகமென்பது இந்திரலோகத் தைக் குறிக்குமென்று கொள்ளில் இந்திரலோகத்திற்கே பகவான் திரும்பி வரவேண்டுமென்று பிரார்த் தித்ததாக ஏற்பட்டு, அது மற்ற பிர மாணத்தோடு முரண்பட்டுப் பொருந் தாமல் போய்விடுமாகையால்-என்க.

ஸ்ரீராமாயணப் பொருட் சுருக்க மாக அமைந்த பாலகாண்ட முதற் சருக்கத்தில் 'பல நூற்றுக்கணக்கான அச்வமேத யாகங்களையும் பல பஹு ஸுவர்ணகமென்னும் வேள்விகளையும் செய்தும் பதினுயிரம் கோடிப் பசுக் களை அந்தணர்க்கு அளித்தும் பிறகு இராமபிரான் ப்ரஹ்ம லோகத் திற்குச் செல்லப்போகிருர்' (95) என்று நடக்கப் போவதை யறிந்த நாரதமுனிவரால், இராமனுக அவ தரித்த விஷ்ணு ப்ரஹ்மலோகத் திற்கே செல்லப்போவதாக வருணிக் கப்பட்டுள்ளது. ப்ரஹ்ம லோக மாவது பரப்ரஹ்மத்தின் லோகமாய் முக்தி பெற்றவர்களால் அடையப் படுமதான வைகுண்ட லோகமே யாகும். ப்ரஹ்மாவான நான்முகனு டைய லோகமன்று=நான்முகனுல கிற்கு விஷ்ணு திரும்பிச் செல்வ தென்பது சந்தருப்பத்திற்கு முரண் பட்டதாகையால் என்க. ப்ரஹ்ம லோக சப்தம் சசீபதியான இந்திரனு டைய லோகத்தையும் குறிக்காது— அது அப்பொருளுக்கு இடுகுறிப்பெய ரென்பதைத் தெரிவிக்கும் அதிகமான ப்ரயோகமோ நிகண்டுவோ கிடை யாதாகையாலும், காரணப்பெயரா னுல் அதன் பொருளாகிய ப்ரஹ்ம ஸம்பந்தம் இந்திரலோகத்திற்கு எவ் வகையிலும் பொருந்தாமையாலும்— என்று கொள்க.

இங்கு, இராமனுகத் தோன்றிய விஷ்ணு பகவான் வைகுண்ட லோகத் திற்குச் செல்லுதல் அவசியமாகச் சொல்ல வேண்டியிருந்தாலும், ஸ்வர் லோக சப்தம் வைகுண்டத்தைக் குறிக்குமாற்றலுடையதென்பதற்குச். சான்ருக அதிக ப்ரயோகமோ நிகண்டுவோ இல்லாமையால் அச் சொல் வைகுண்டத்தை எங்ஙனே குறிக்கும் என்று கேள்வி கேட்டல் பொருந்தாது—ஏனெனில் ஸ்வர்க்க சப்தம் லௌகிகமான அதிக ப்ர யோகத்தினுல் சசீபதியான இந்திர னது உலகினைக் குறிக்குமென்பது போல, வைதிகமான ப்ரயோகங் களின் பலத்தினுல் வைகுண்டத்தைக் குறிக்குமென்பதும் தடையின்றிச் சித்திக்கக் கூடுமாகையால்—என்க.

(தொடரும்)

# ★ கீதை காட்டும் நல்வழி ★

**சிரத்தாத்ரய விபாக யோகம்**

**அத்தியாயம் — 17**

பகுதி — 10

ஏதுமாறுகிறதோ, எது தோன்றி மறைகிறதோ, எது பிறப்பிறப்புக் குள்ளாகிறதோ, எதற்கு முதலும் முடிவும் உண்டோ அது பொய் அல்லது அஸத் ஆகும். மாறாக எது மாறாததோ, தோன்றி மறையாததோ எதற்கு ஆதியும் அந்தமும் கிடையாதோ, அது மெய் அல்லது 'ஸத்'. தோன்றி, இருந்து, மறையும் அப் பிரபஞ்சம் பொய் அல்லது அஸத். 'ஏகோ஽ஹம் ப்ஹுஸ்யாம்' ஒன்றாயிருப்பது பலவாகட்டும்' - இப்படித் தான் பிரம்மம் பிரபஞ்சமாக விரிவடைந்தது என்று வேதம் கூறுகிறது. இன்றைய நவீன விஞ்ஞானமும் இதையே மெய்ப்பிக்கிறது. இப்பிரபஞ்சம் எப்படித் தோன்றியது, இனி இது எப்படி மாறும், மறையும் என்பது பற்றிய நவீன விஞ்ஞானிகள் பல்வேறு கொள்கைகளை உருவாக்கியிருக்கின்றனர். அவற்றிலே ஒன்று 'Big Bang Theory' ஆகும். இதன் பிரகாரம் இப்பிரபஞ்சம், அதாவது கோடானு கோடி நட்சத்திர மண்டலங்கள் அடங்கிய பிரபஞ்சம்— ஆரம்பத்தில் மிகமிக அடர்த்தியான ஒரு பொருளாக இருந்தது. அது வாயு வாகவோ அல்லது வேறு எப்படியாகவோ இருந்திருக்கலாம். மிக அதிக அழுத்தத்தின் காரணமாக அது வெடித்துச் சிதறி பல்வேறு நட்சத்திர மண்டலங்கள் உருவாகியிருக்கலாம். அப்படி உருவான பிரபஞ்சம் விரிவடைந்து கொண்டே போகிறது. இந்த விரிவு அல்லது expansion எதுவரை நிகழும்? ஒரு எல்லை வரை.

அதாவது critical value அடையப்படும் வரை. அதன்பின் விரிந்த உலகம் சுருங்க ஆரம்பிக்கும். திரும்பவும் அது ஆரம்ப நிலைக்குப் போய் விடும். தோன்றிய நிலையிலிருந்து அது தோன்றா நிலைக்குப் போய்விடும். அதுவே பிரம்மம். காலத்தால், இடத்தால், செயலால் பாதிக்கப்படாதிருப்பது 'ஸத்' ஆகும். எனவே பிரம்மம் 'ஸத்' என்று குறிப்பிடப்படுகிறது.

யக்ஞம், யாகம் போன்ற நற்காரியங்கள் செய்கையில் அவை நிறைவு பெறுகையில் 'ஓம் தத் ஸத்' என்று சொல்லி முடிப்பது வழக்கமாகும். செய்யப்படும் செயல்களில் ஏதாவது குறையிருக்குமானால் அவற்றை நினைவு படுத்தும் வகையில் 'ஓம் தத் ஸத்' கூறப்படுகிறது. 'ஓம் தத் ஸத்' என்பதன் பொருள் ஓசை அல்லது நாத வடிவமாயுள்ள அந்த பிரம்மமே மெய்ப்பொருள் என்பதாகும்.

பிரம்மத்திலிருந்து அனைத்தும் உண்டாயின. இருப்பினும் இந்த சுலோகத்தில் குறிப்பாக அந்தணர்கள், வேதங்கள், யக்ஞங்கள் ஆகியவை பிரம்மத்தினின்று உண்டாயின என்று பகரப்படுகிறது. பிரம்மத்தின் விளக்கமாக வேதங்கள் அமைகின்றன. அந்த வேதங்களை உணர்ந்தவர்கள் பிராம்மணர்கள். பிராம்மணர்கள் என்ற வார்த்தைக்கே 'பிரம்மம் ஜானாதி இதி பிராம்மண:' 'பிரம்மத்தை அறிந்தவனே பிராம்மணன்' என்பதுதான் பொருள். வேதத்தின் உட்பொருளே யக்ஞத்தில்தான் அடங்கியுள்ளது. 'யக்ஞம்' என்ற சொல்லுக்கு ஏற்கனவே முன்புகூறப்பட்டிருப்பது போன்று 'பொது நன்மைக்காக மேற்கொள்ளப்படும் கூட்டு முயற்சி' (Co-operative endeavour for collective good) என்பது பொருள். எனவே இந்த மூன்றும் குறிப்பாக பிரம்மத்திலிருந்து உண்டானவையாகக் கூறப்படுகின்றன.

'ஓம் தத் ஸத்' என்ற மூன்று வார்த்தைகளையும் பிரம்மத்தை விளக்கும் மூன்று மூலமந்திரங்களாகக் கொள்ளலாம்.

அடுத்து இந்த மந்திரங்கள் எவ்வகையில் உதவுகின்றன என்ற கேள்விக்கு அடுத்த சுலோகத்தில் விளக்கம் வருகிறது.

**பேராசிரியர் டி. கே. நாராயணன்**
M.S.c., M.Phil.,
**ஆசிரியர், 'சமயஜோதி' மதுரை.**

**' தஸ்மாதோமித்யுதாஹ்ருத்ய
யக்ஞதானதப: க்ரியா: |
ப்ரவர்தந்தே விதானோக்தா:,
ஸததம் ப்ரஹ்மவாதினாம் ‖ (17-24)**

'ஆகையால் வேதமறிந்தவர்கள் வேத விதிப்படி செய்யும் யக்ஞ, தான தபக்கிரியைகள் எப்பொழுதும் 'ஓம்' என்று உச்சரித்துத் தொடங்குகின்றன.'

செயல் என்று செய்யத் தொடங்கி விட்டால் அதில் ஏதாவது குறை பாடுகள் வருவது சகஜமே. குறையற்ற எந்தக் கர்மமும் இருக்க முடியாது. வேதம் கர்ம காண்டம், ஞான காண்டம் என்ற இரு முக்கியப் பிரிவுகளைக் கொண்டது. இதில் ஞானம் பரிசுத்தமானது, தூய்மையே வடிவானது. ஆனால் கர்மம் குறையுடையது. அதற்காக எடுத்த எடுப்பில் எல்லோரும் ஞானத்தை அடைந்துவிட முடியாது. 'பஹூனும்

ஜன்மனுமந்தே ஞானவான் மாம் ப்ரபத்யதே'-'பல பிறவிகளை எடுத்து, முடிவில் ஞானி என்னை அடைகிறான்' என்பதுவே கீதையில் கண்ணனின் கூற்றாகும். கர்மம் செய்வது எல்லோருக்கும் இயல்பானது. பிறப்பெடுத்தவர் கர்மம் செய்துதானாக வேண்டும். குறைபாடுடையது என்பதால் கர்மத்தைச் செய்யவும் வேண்டும். அதில் ஏதாவது குறைபாடுகள் இருக்கத்தான் செய்யும். அக்குறைபாட்டைப் போக்குவதற்குக் கர்மத்தை தொடங்குமுன் மூலமந்திரமான 'ஓம்' உச்சரிக்கப்படுகிறது.

இதன் 'உட்பொருள்' என்ன?

இயற்கையில் எங்கு நோக்கினும் ஓர் ஒழுங்குப்பாடு இருக்கிறது. இந்த ஒழுங்குப்பாடுதான் இயற்கைக்கு அழகு ஊட்டுகிறது. கல், கடல், கழுதை, நதி, மேகம், மரம் இப்படி எதுவானாலும் எல்லாம் அழகின் உருவகமாக ஒவ்வொரு விதத்தில் திகழ்கிறது. இயற்கையின் நடைமுறைக்கு ஒத்ததாக எந்தச் செயல் இருக்கிறதோ, அந்தச் செயலில் அழகு மிளிர்கிறது. இயற்கையோடியைந்து வாழத் தெரிந்து கொண்டால் நமது வாழ்வும் அழகுற அமைகிறது. இயற்கையின் இயக்கத்தில், அது அணுவினுள் உள்ள எலக்ட்ரான்களின் சுழற்சியாகட்டும் அல்லது பல்வேறு நட்சத்திர மண்டலங்கள் நிறைந்த காலக்ஸிக்களின் சுழற்சியாகட்டும் எங்கும் ஓர் ஒழுங்குப்பாடு உள்ளது. இதை உணர்த்தும் வகையில்தான் பிரம்மத்தின் விளக்கமான 'ஓம்' ஒவ்வொரு செயலின் தொடக்கத்திலும் உச்சரிக்கப்படுகிறது.

விநாயகர் வழிபாட்டின் அடிப்படைத் தத்துவம் இதுதான். ஓம்கார ரூபியான விக்னேசுவரப் பெருமானை வழிபட்டே எந்தக் காரியமும் தொடங்கப்படுகிறது. எதற்காக? 'நான் ஆரம்பித்திருக்கும் இச்செயல் இயற்கையோடு ஒத்ததாக இருக்கட்டும். இச்செயல் எவருக்கும் தீங்கு விளைவிக்காது, நெறி பிறழாது, முறை பிசகாது இனிதே நலமாய் முடியட்டும்,' என்ற நமது பிரார்த்தனையின் வடிவம்தான் ஓம். எல்லா ஓசையும் ஓம்காரத்தில் ஒடுங்குவது போல, அனைத்துத் திட்டங்களும், செயல்களும் இயற்கைத் திட்டத்தினுள் அடங்கிவிட வேண்டும். இயற்கையை மீறினால் நாம் இயற்கையால் தண்டிக்கப்படுவோம். இன்றைய சமூகம் பல்வேறு தொல்லைகளுக்கும், அல்லல்களுக்கும் உள்ளாகியிருப்பதற்குக் காரணம் மனித சமுதாயம் தான்தோன்றித் தனமாக, இயற்கை நெறிமுறைகளை மீறி வாழ முற்பட்டதனாலேயாகும். கொஞ்சம் கண்களை மூடி சிந்தித்துப் பார்த்தால் எந்தெந்த விதங்களில் நாம் இயற்கையை மீறுகிறோம், அதற்காக எப்படி எப்படி தண்டிக்கப்படுகிறோம் என்பது புலனாகும்.

'ஓம்' என்று உச்சரித்து ஒவ்வொரு செயலையும் ஆரம்பிப்பதன் உட்கருத்து 'என் செயல் விக்கினம் எதுவுமின்றி முடியட்டும்' எனபதேயாகும்.

அடுத்து தத் என்ற பதத்தின் மகிமை எடுத்துரைக்கப்படுகிறது.

தநித்யனபிஸந்தாய
பலம் யக்ஞதப:க்ரியா: |
தானக்ரியாஸ்ச விவிதா:
க்ரியந்தே மோக்ஷகாங்க்ஷிபி: ||
(17-25)

'தத்' என்று பிரம்மத்தைக் குறிக்கும் சொல்லை உச்சரித்துப் பலனை விரும்பாது மோட்சத்தை நாடுபவர்களால் பலவிதமான யக்ஞதானதபக்ரியைகளும் தானச் செயல்களும் செய்யப்படுகின்றன.'

'தத்' என்பது 'அது' என்று பொருள்படுகிறது. அது பிரம்மத்தைக் குறிக்கிறது. 'தத்' என்று சொல்லுகையில் 'இவை அனைத்தும் என்னுடையது அல்ல. எல்லாம் அந்தப் பரம்பொருள் வடிவமானது' என்ற எண்ணம் மனத்தில் உண்டாக வேண்டும்.

(தொடரும்)

## கவனிக்கவும்

திருமலையில் குடில்கள், அறைத் தொகுதிகள், தங்குமிடங்கள் கட்டுவதற்கென நன்கொடையாளர்கள் அனுப்பும் தொகையானது செயலாட்சித் தலைவர், தி. தி. தேவஸ்தானம் எனும் பெயரில் டி. டி. மூலம் அனுப்பப்படல் வேண்டும். கடிதப் போக்குவரத்துக்களை, தி. தி. தே. செயற் பொறியாளர் V என்னும் முகவரியுடன் கொள்ளாது, இனி மேல் தி. தி. தே. செயலாட்சித் தலைவர், அல்லது தலைமை கணக்கு அலுவலர் எனும் முகவரிகளுடன் வைத்துக் கொள்ளவும். ஏனெனின் 'நன்கொடைத் திட்டம்' தற்போது தி. தி. தே. நிதி ஆலோசகர் மற்றும் தலைமை கணக்கு அலுவலர் பொறுப்பில் செயற்பட்டு வருகின்றது.

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

ஒரு சிசுவாய் மாறிற்று. இதையெல்லாம் பார்த்த அரக்கி அதிசயித்துப் போனாள்.

'இது அரசனுடைய குழந்தை. அற்புதச் சக்தி படைத்த இந்தக் குழந்தையைக் கொல்லுதல் கூடாது' என நினைத்தாள். உடனே தன் அரக்கி உருவத்தை மாற்றி மானிடப் பெண் போல் உருவம் தரித்துப் பிருகத்ரதனிடம் போனாள். பின், "அரசே! இது உன் குழந்தைதான்! இதைப் பெற்றுக் கொள்! நீ நலம் பெறுவாய்!" என்று குழந்தையை அரசனிடம் ஒப்படைத்துவிட்டுத் தன் இருப்பிடம் போய்ச் சேர்ந்தாள் அந்த அரக்கி.

அரக்கியரிடமிருந்து குழந்தையை பெற்றுக் கொண்ட அரசன் சந்தோஷித்தான். அந்த குழந்தையைத் தன் மனைவிகளிடம் ஒப்படைத்துச் சீராட்டிப்பாராட்டி வளர்த்தான். அந்த குழந்தையே இந்த ஜராசந்தன்.

ஜராசந்தன் முனிவரின் தபோ பலத்திஞல் பிறந்தவனுதலால் அளவு கடந்த உடல் பலத்தை பெற்றிருந்தான். தோல்வி என்பதையே அறியாதவனுயும் இருந்தான். மேலும் அவன் உடல் இரண்டு கூறுகளாய் பிளந்து ஒன்று கூடிய உடலானதால் இரு உருவாகப் பிரியும், பிரிந்தபின் மீண்டும் தானே ஒன்று சேரும் தன்மையையும் பெற்றிருந்தது.

ஹம்சன், இடிம்பகன், கம்சன் இவர்கள் எல்லோரும் ஜராசந்தனுக்குத் துணையாய் நின்ற அரசர்கள். இவர்கள் எல்லோரும் இறந்துவிட்டபடியால் ஜராசந்தனை எதிர்ப்பது மிகக் கடினமானது அல்ல என்பதை கிருஷ்ணன் உணர்ந்து கொண்டான். ஆனாலும் அவனுடன் போர் செய்வதில் பலன் ஏதும் இருக்காது. ஆனால் "துவந்த யுத்தத்தின் மூலம்தான் அவனை ஜயிக்க வேண்டும்" என்று கிருஷ்ணன் முடிவு செய்து கொண்டான். அந்த முடிவை பீமார்ச்சுனர்களும் ஏற்றுக்கொண்டார்கள்.

துவந்த யுத்தம் என்பது பகைவன் ஒருவன் போருக்கு அழைத்தால்...... ஷத்திரிய வீரன் கண்டிப்பாய் ஒப்புக் கொண்டே ஆகவேண்டும். அதுவும் பகைவன் எவ்விதமாய் யுத்தம்செய்ய வேண்டும் என்று விருப்பம் தெரிவிக்கிருனே...... அதே முறையைத்தான் எதிராளியும் ஒப்புக்கொள்ள வேண்டும். இது அந்த காலப் பழக்கம். இந்தப் பழக்கம் பாண்டவர்களுக்கு மிகவும் அனுகூலமாயிருந்தது. அதை அவர்கள் நன்ருகப் பயன்படுத்திக் கொண்டு ஜராசந்தனுக்கு எதிராக சதிசெய்தார்கள்.

ஒருவராலும் அறிய முடியாதபடி அவர்கள் மரவுரியும் தருப்பையும் தரித்து ஆயுதமேதும் இல்லாமல் ஜராசந்தனுடைய ராஜதானியை அடைந்தார்கள். அதற்காக புரோகிதர்களை வரவழைத்து சாந்தி செய்தான். அத்துடன்நிற்காமல் தானும் உபவாசம் இருந்தான்.

தருப்பையும் மரவுரியும் தரித்த பாண்டவர்களும் கிருஷ்ணனும் ஜராசந்தனின் அரசபைக்குள் சென்ருர்கள். ஜராசந்தன் அவர்களைக்கண்டதும் யாரோ உயர்குலத்து அதிதிகள் வருகிருர்களே என்று எதிர்கொண்டு அழைத்து முகமன்கூறி வரவேற்ருன்.

பேசினுல் பொய் சொல்ல நேரிடும் என்ற காரணத்தால் அர்ச்சுனனும் பீமனும் தங்கள்எண்ணத்தை வெளிப்படுத்தாமல் மௌனம் சாதித்தார்கள். அரசனுக்குப் பதில் சொல்ல வேண்டிய கட்டாயத்தால் கிருஷ்ணன் மட்டும், "அரசனே! இவர்கள் இருவரும் இப்போது ஒரு விரதத்தை அனுஷ்டிப்பதால் பேசமாட்டார்கள். நடுநிசிக்கு மேல்தான் இவர்கள் பேசுவார்கள். சிரமத்தைப் பொறுத்தருளுங்கள்." என்று சமாதானமாய் பதில் கூறினுன்.

அதற்கு மேல் ஜராசந்தன் அவர்களிடம் ஏதும் கேட்காமல் யாக சாலையில் தங்க வைத்து விட்டுப் போனுன். உயர்குலத்து அதிதிகள் எவரேனும் வந்தால் அவர்கள் சௌகரியப்படியே அவர்களைக் கண்டு பேசுவதை வழக்கமாய்க் கொண்டிருந்தான் ஜராசந்தன். அந்த வழக்கப்படியே நடு இரவுக்கு மேல் பாண்டவர்களைக் காண யாகசாலைக்குச் சென்ருன் ஜராசந்தன். அப்போது அவர்களுடைய நடத்தையில் அவனுக்குச் சந்தேகம் தோன்றியது. இவர்கள் பார்ப்பதற்கு ராஜகுமாரர்கள் போலிருக்கிருர்கள். இவர்கள் எந்த தேசத்தைச் சேர்ந்தவர்களாயிருப்பார்கள்? எதற்காக மரவுரியும் தருப்பையும் தரித்து வரவேண்டும்? இவர்கள் நோக்கம் என்னவாயிருக்கும்? ஷத்திரிய வீரர்களைப் போல் தெரிகிறது. கைகளிலும் வில்லின் நாண் உரைத்துக்காய்ப்புகளும் தெரிகிறது. இவர்கள் யாராயிருப்பார்கள்? பலவாருய் சிந்தித்த பின் "நீங்கள் யார்? எதற்காக இந்த வேடத்தில் இங்கு வந்திருக்கிறீர்கள்? உண்மையைச் சொல்லுங்கள்" எனக் கோபமாய்க் கேட்டான்.

அதற்காகவே காத்திருந்த பாண்டவர்களும், "நாங்கள் உன் பரம வைரிகள். உன்னோடு சண்டை செய்யவே வந்திருக்கிறோம். நீ எங்கள் மூவரில் யாருடன் வேண்டுமானுலும் சண்டை செய்யலாம். அது உன் விருப்பம்" என்ருர்கள்.

வந்திருந்த மூவரும் யார் எனத் தெரிந்து கொண்டபின் "கிருஷ்ணு நீ துவாரகாபுரியின் மன்னனுய் இருந்தபோதிலும் உன்னோடு சண்டை செய்வதில் எனக்குப் புகழில்லை. காரணம் நீ இடையர் குலத்தில் பிறந்தவன். அர்ச்சுனனே சிறுபிள்ளையாய் இருக்கிருன். பாவம்! என் தேகபலத்திற்கு அவனுல் ஈடுகொடுக்க முடியாது. பீமன் ஒருவன்தான் எனக்குச் சமமானவன். தேக பலத்திலும் புகழ் பெற்றவன். அதனுல் நான் அவனுடனே சண்டை செய்ய விரும்புகிறேன். பீமன் நிராயுதபாணியாய்

இருக்கிறுன். அதனுல் நானும் ஆயுதம் ஏதுமில்லா மல்யுத்தம் செய்ய விரும்புகின்றேன். உடனே பீமனே என்னுடன் மல்யுத்தம் செய்ய அழைக்கிறேன்" என்று கூறினுன் ஜராசந்தன்.

ஜராசந்தனின் அறைகூவல் ஏற்றுக்கொண்ட பீமன் உடனே மல்யுத்தத்திற்குத் தயாராஞன். பீமனும் ஜராசந்தனும் ஒருவரை ஒருவர் கடுமையாகத் தாக்கிக் கொண்டார்கள். வெற்றி தோல்வியை நிர்ணயிக்க முடியாத வேகத்தோடு இருவரும் இரவு பகல் பாராது சண்டை செய்தார்கள். இறுதியில் ஜராசந்தன் சற்று களேப்புற்றுத் தயங்கினுன். 'இது தான் இவனேக் கொல்வதற்கு ஏற்ற சமயம்' என பீமனேத் தூண்டினுன் கிருஷ்ணன். உடனே பீமன் ஜராசந்தனேத் தூக்கிப் போட்டு கால்களேப் பிடித்து அவன் உடலே இரண்டாக கிழித்துப் போட்டு வெற்றிச் சிரிப்பு சிரித்தான்.

ஆனல் சற்று நேரத்திற்குப் பிறகு கிழிபட்ட இரண்டு பாகங்களும் தாமாகவே ஒன்று சேர ஜராசந்தன் மீண்டும் உயிர் கொண்டு எழுந்து பீமனுடன் யுத்தம் செய்தான். இப்படியே பலமுறை பீமன் ஜராசந்தனேக் கிழித்து எறிந்தாலும் அவன் மீண்டும் மீண்டும் உயிர் கொண்டு எழுந்து பீமனுடன் யுத்தம் செய்வதிலேயே முனேப்பாயிருந்தான். இதைக் கண்டு பீமன் அவனேக் கொல்லும் வழியறியாது திகைத்தான். அப்போது கிருஷ்ணன் ஒரு புல்லே எடுத்து இரண்டாய்க் கிழித்து கால்மாற்றிப் போடும்படி சைகை செய்தான். அதன் பொருளே உணர்ந்து கொண்ட பீமன் மறுபடியும் ஜராசந்தனே இரண்டாய்க் கிழித்து அப்படியே போடாமல் கால் மாற்றித் தலைகீழாய்ப் போட்டான். அத்துடன் ஜராசந்தன் மடிந்தான்.

அதன்பின் பாண்டவர்கள் ஜராசந்தனுல் சிறையில் அடைபட்டுக் கிடந்த அரசர்களேயெல்லாம் விடுவித்தார்கள். ஜராசந்தனின் மகனுக்குப் பட்டாபிஷேகமும் செய்து வைத்தபின்இந்திர பிரஸ்தம் போய்ச் சேர்ந்தார்கள். பிறகு தங்களே எதிர்ப்பவர்கள் யாரும் இல்லாமல் இருந்ததால் நாடு முழுதும் விஜயம் செய்து 'ராஜசூய' யாகத்தை சிறப்பாகச் செய்தார்கள். சகோதரர்களின் ஆசைப்படியே தருமபுத்திரன் 'சாம்ராஜ்ய' பதவியைஅடைந்து 'ராஜாதிராஜ' பட்டத்தையும் பெற்றுன்.

நியாயமான ஆசைகள் நிச்சயம் நிறைவேறும் என்பது பொதுவான கருத்து. தகுதி உள்ளவர்கள் தகுதியானவற்றிற்கு ஆசைப்படுதலே சிறப்பாகும். பாண்டவர்கள் செய்தது தருமத்திற்குப் புறம்பானது என்றே அநீதியானது என்றே வியாசர் கூறவில்லே. மாருக அதிலும் ஒரு தத்துவத்தையே சொல்கிருர். அதைக் கொஞ்சம் ஆழ்ந்து படித்தால்தான் அது நம் சிந்தனேக்குத் தெளிவாகும். அதற்கு ஒரு சின்ன உதாரணம்......

இந்த உலகத்தையே தன் வாய்க்குள் காட்டியவன் கிருஷ்ணன். அவனுக்கு ஜராசந்தனே வெல்வது என்பது கடினமான காரியமே அல்ல. ஜராசந்தனுக்கு நிகரான பலம் கொண்ட கம்சனேயே போரில்கொன்ற கிருஷ்ணன், அவனுக்குப் பயந்து கொண்டு மதுரையை விட்டே ஓடியது ஏன்? தத்துவங்களின் தாத்பரியங்களே விளக்க அல்லவோ இந்த நாடகம்.

புராணங்களின் அடிப்படை நோக்கம் மனித வாழ்க்கைக்குத் தேவையான தத்துவங்களே விளக்குவதே! காலத்தால் அழியாத, நம் சிந்தனேக்கு விருந்தாகும் பற்பல அறிய தத்துவங்களே விளக்கிக் கூறும் எண்ணற்ற புராணக் கதைகளில் இந்த ஜராசந்த ஜன்மக் கதையும் ஒன்றுகும்.

(முற்றும்)

---



# கோவிந்தா! கோவிந்தா!!

ஓங்கி உலகளந்த உத்தமன், கோதாசாரியன் கண்ணனை அருளியது 'மாசானும் மார்கசீர்ஷோ' என்ப தாகும். பீடுடைமாதம் அதாவது பெருமை பொருந்திய மாதம். பீடை மாதம் அல்ல என்பதனை நன்குணர்ந்து செயல்படுகின்றனர் நம்மனோர்.

ஆனால் 'கோவிந்தா' என்னும் சொல்லுக்கேஉரிய மாதம் புரட்டாசி. மகாத்மா காந்தியடிகள் தோன்றிய தும் வள்ளலார் என்னும் ஸ்ரீ இராமலிங்க அடிகளார் வருவிக்க உற்ற நாளும் புரட்டாசிதானே.

"ஆவணி அஷ்டமியிலே, அர்த்த ராத்திரியிலே அமைதியான சிறையி னிலே, அகில முழுமையும் அகத்தே அடக்கிய ஆண்டவன் சிறுபாலனாக, தேவகிக்கு மைந்தனாக அவதரித்து ஓரிரவில் (அந்த இரவிலேயே) தந்தை வசுதேவர் தாங்கிச் சென்று சேர்க்க, யசோதை இளஞ்சிங்கமாகத் தோன் னுர். ஓடுவார், விழுவார், உகந்து ஆலிப்பார், நாடுவார், நம்பிரான் எங்குற்ருன் என்று ஆயர்பாடியே ஆனந்தக் கடலில் மூழ்க, பத்து நாளும் கடந்த இரண்டாம் நாள் எத் திசையும் சயமரம் சோடித்து, உத் தானம் செய்து ஆயர் உகந்த கண்ண னுக வளர்ந்தான். அற்புத லீலைகள் செய்தான். கோவிந்தன் ஆனுன். கோவிந்தன் ஆன வைபவத்தைத் தான் புரட்டாசியிலே கொண்டாடுகி ரேம்.

ஆண்டொன்றுக்கு ஐம்பத்திரண்டு சனிக்கிழமைகள் ஏழு ஆண்டுகட்கு ஒரு முறை மட்டும் ஐம்பத்து மூன்று சனிக்கிழமைகள். இத்தனை சனிக் கிழமைகளிலேயும் புரட்டாசிமாதத்து ஐந்து சனிக்கிழமைகளில் ஏதாவது ஒரு சனிக்கிழமை குறிப்பாக மூன்ரு வது சனிக்கிழமை எல்லோரும் கோவிந்தனை அழைக்கிருர்கள். 'கோவிந்தா கோவிந்தா' என்கிருர் கள். நெற்றியிலே ஏதும் அணியாத வர்களும் வேறு சின்னங்கள் அணிப வர்களும் கூட, அந்த மாதம் முழுவ துமோ அன்றி ஐந்து சனிக்கிழமை கள் மட்டிலுமோ அல்லது ஐந்தில் ஏதாவது ஒரு சனிக்கிழமை மாத்திரமோ நாமம் போட்டுக்கொள் கிருர்கள். ஆதாவது திருமண்காப்பு அணிகிருர்கள். கோடிகள் குவிந்தா லும் கோவிந்தனை மறவோம் என்ற திடவிரதத்துடன் படித்தவரும்பாமர ரும் பண்டிதரும் நிதி படைத்தவரும் கூட "நாராயண கோபாலம்" "கோவிந்தா கோவிந்தா" என்று கூறிக்கொண்டே உஞ்சவிருத்தி செய்து, பெருமானுக்குப் படைக்கும் அக்கார வடிசிலிலே அந்த அரிசியைச் சேர்த்து, மூட நெய் பெய்து முழங் கை வழிவார ஏழை எளியவருடனும் கூடியிருந்து 'கோவிந்தா' சொல்லி, சமபந்தி போஜனம் செய்வது புரட் டாசி சனிக்கிழமையேயன்ரே!"

இவ் விவரங்களை யெல்லாம் நாரதர் க்ஷத்திரபந்து என்னும் அரச னுக்கு எடுத்துக் கூறி மேலும் விரித் துரைக்கலானுர்.

---

திரு. ரகுநாத ராமாநுஜதாசன்
சென்னை-45.

---

க்ஷத்திரபந்து ஒரு நல்ல அரசன் (கத்திரபந்து என்றும் கூறுவதுண்டு) ஆதிகாலத்திலே அரச பரம்பரையி னர் ஆண்டு வந்த சமயத்தில் க்ஷத்தி ரபந்து தனது நாட்டை நன் முறை யிலே அரசாண்டு வந்தான். அவனது நாடு சுபிட்சமாயிருந்தது. மாதம்

மும்மாரி பெய்தது. மக்கள் மகிழ்ச்சியோடிருந்தனர். தெய்வபக்தி வளர்ந்துகொண்டே இருந்தது. ஆலய நிர்வாகமும் சரிவர நடந்துவந்தது.

வாரந்தோறும் புதன்கிழமைதினம் காலையில் எண்ணெய் ஸ்நானம்செய்து புருக்கறி சாப்பிட்டால் நல்லது என்னும் தீய எண்ணம் யாராலோ தூண்டிவிடப்பட அதற்கு அடிமைப்பட்டான் அரசன் க்ஷத்திரபந்து. பிரதி செவ்வாய்க்கிழமை மாலை வில்லியர் புருக்கறி பக்குவப்படுத்திப் பரிசாரகனிடம் கொடுக்க, மறுநாள் காலை எண்ணெய் ஸ்நானம் முடிந்ததும், சமைத்துப் பரிமாற உணவுடன் உண்டு வந்தான் அரசன்.

ஒரு செவ்வாய்க்கிழமை வில்லியர்க்கு புருக்களே கிடைக்கவில்லை. சோர்ந்துபோய் அரச தண்டனையை எதிர்பார்த்து நகரின் மயானவழி வந்து கொண்டிருந்தனர். எரிந்து கொண்டிருந்தபிணத்தைக் கண்டதும் குறுக்கு யோசனை செய்தனர். காவல்காரன் ஏமாற்றப்பட்டான். புருக்கறி அளவான நரமாமிசப் பொட்டலம் பரிசாரகனிடம் தரப்பட்டது. அவனும் சமைத்திட்டான், அரசனும் உண்டிட்டான்.

மறுநாள் வில்லியர் அரசவைக்கு அழைக்கப்பட்டனர். நடுங்கிக் கொண்டே சென்ற வில்லியர்க்கு முத்துமாலை பரிசளிக்கப்பட்டது. இதே போன்ற புருவின் கறிதான் வாரந்தவறாது கொண்டு வரவேண்டும். மாற்றினால் உயிரிழப்பீர் என ஆணையிட்டனுப்பினான் அரசன். வில்லியர் கலங்கினரேனும் தங்களுயிர் காத்திட வேற்றுயிரைக் கொன்றனர். நரமாமிசம் அளித்து வந்தனர். சமைத்துக் கொடுத்ததை அரசனும் உண்டு வந்தான். நாளடைவில் இதன் பயனாக அரசன் அசுரன் ஆனான். கோரைப்பற்கள், கோர சொரூபம். செயல்களில் அசுரத் தன்மை. மக்கள் வெறுத்தனர். மன்னனை காட்டிற்குத் துரத்தினர்.

கைக்குக் கிடைத்த விலங்குகளையும், ஏமாந்து சிக்கிய மனிதர்களையும் கொன்று தின்று காலம் போக்கினான். நல்வினை காட்ட நாரதர் அவ்வழி வந்தார். நாராயண நாம ஒலி கேட்டதும் உணர்வில் ஓர் அசைவு. ஆயினும் நர உணவு கிட்டியதே என்றமகிழ்ச்சியுடன் அணுகினான். அதைக் கண்ட நாரதர் 'க்ஷத்ரபந்து' என்றார். அதிர்ந்தே போனான் அரச அசுரன். அந்த நிலையிலே தான் முதலிலே கூறியதெல்லாம் மொழிந்தார். மற்றும், இப்பிறவியிலேயே கடைத்தேறும் மார்க்கம் கூறுவேன் உய்ந்து போவாய் என்ற நாரதரை நோக்கி, 'எண்ணற்ற தீவினைகளைச் செய்து வல்வினைகளால் மொய்க்கப்பட்டுள்ள எனக்கும் உய்வுண்டா' என்றான். நிச்சயம் உண்டு எனக் கூறவும் நாம ஒலி கேட்ட மகிமையால் நாரதரின் அடி பணிந்து நற்கதி பெற மார்க்கம் கோரினான்.

கவனமாகக் கேள் க்ஷத்திரபந்து என நாரதர் தொடர்ந்தார். கவுரவர்களுடைய சபையிலே, கணவரின் முன்னிலையிலே கட்டியிருந்த சேலையை அண்ணன் சொல் கேட்டு அவிழ்த்து அவமானப்படுத்த முனைந்தான் துர்ச்சாசனன். நடுங்கினாள் திரௌபதி. தரும, பீம, அர்ச்சுன, நகுல, சகாதேவர்களை நோக்கினாள். தலை குனிந்து நின்ற நிலையினைக் கண்டாள். துர்ச்சாசனன் பிடித்திழுத்தத் துகிலினைத் தன் கைகளால் பிடித்துத் தடுத்தாள். சோர்ந்தாள். 'கோவிந்தா' 'கோவிந்தா' என்றாள்.

'ஆறுகி யிருதடங்கண் அஞ்சன வெம்புனல் சோர அளகம் சோர, வேறான துகில் தகைந்த கைசோர மெய்சோர, வேறோர் சொல்லுங் கூறாமற் 'கோவிந்தா கோவிந்தா' என்றரற்றிக் குளிர்ந்து நாவில், ஊறுத அமிழ்து ஊற உடம்புளகித்து உள்ளமெலாம் உருகினாளே - (வில்லி பாரதம்) 'கோவிந்தா கோவிந்தா' என்று உருகியதால் என்ன ஆயிற்று. கோடிக்கணக்கான புத்தம்புது ஆடைகள். துர்ச்சாசனன் மிக்க பலமுடையவன். அவனே சோர்ந்து விழும் அளவிற்கு சேலைகள் தொடர்ந்து கொடுத்து திரௌபதியின் மானம் காத்தவன் கோவிந்தனல்லவா? திரிகரண சுத்தியோடு கோவிந்தனை பஜித்தால் என்ன வேண்டுமானாலும் கைகூடும். இது நிச்சயம்.

க்ஷத்திரபந்து பதில் சொல்லவில்லை. அவ்யவங்கள் ஒருங்கிணைந்து கைகளைக் கூப்பி கோவிந்தனைத் தொழுது, மனம் ஒன்றுபட்டு கோவிந்தனை நினைத்து, 'கோவிந்தா கோவிந்தா' என வாயினாலும் சொல்லலானான்.

மகிழ்ந்தார் நாரதர். சொல், செயல், நினைவு மூன்றும் ஒருமித்து மூன்றெழுத்து உடைய கோவிந்தன் பெயர் அழைக்கப்படுவதைக் கண்டார். ஆம். கோவிந்தா என்ற சொல் மூன்று எழுத்துக்கள் கொண்டது தான். ந் என்னும் மெய்யெழுத்து கணக்கில் சேராது ஆகையினாலே கோ+விந்+தா என்னும் மூன்று எழுத்துக்கள் தான் கணக்கிலடங்கும். தெலுங்கு மொழியிலே గో+విం+దా மூன்றெழுத்துக்கள் தான். வடமொழியில் गो विं दा=மூன்றெழுத்துக்களேதான். ஆகவேதான் தொண்டரடிப்பொடியாழ்வார் என்னும் விப்பிர நாராயணர் 'மொய்த்த வல்வினையுள் நின்று மூன்றெழுத்து உடைய பேரால் க்ஷத்திரபந்தும் அன்றே பராங்கதி கண்டு கொண்டான்' என்கிறார்.

க்ஷத்திரபந்து அன்றையத்தினமே மோக்ஷ உலகம் அடைந்தான் எனக் கூறுகிறார். இது இயலுமா என்று ஐயப்பாடு கொள்வோர், வேறு வகையில் பொருள் கொள்ளலாம். 'க்ஷத்திரபந்தும் அன்றே பராங்கதி கண்டு கொண்டான். க்ஷத்திரபந்தும் அல்லவா மோட்சமடைந்தான்? என்றே பொருள் கொண்டாலும், அவன் பரமபதம் எய்தியது மறுக்க முடியாத தன்றோ? தீய, வலிய வினைகளாலே மொய்க்கப்பட்டும், மூன்றெழுத்தாகிய கோவிந்த நாமம் அவனை

மோட்ச சாம்ராஜ்யத்திற்குக் கொண்டு சென்றது. எனவே இவ்வளவு தாழ்மையான தனது அடியார்களுக்குக் கூட பரமபதம் அளிக்கும் பித்தன், பக்தர்களிடத்திலே பித்துக் கொண்டவன். சௌலப்யன், சரணக்த வத்ஸலன். இத்தகைய பெருமான் நமக்குக் கிடைத்திருந்தும் கூட அவனை வணங்கித் துதிக்காமல் நாத்தழும் பெழ அவனது நாமம் கூறுமல் பிறந்து பிறந்து மடிகின்றீர்களே எனவும் அவர் கவலைப்படுகிருர்.

'நான் புரட்டாசி சனிக்கிழமையில் கூட கோவிந்தா போட்டது கிடையாது. நெற்றியில் இட்டதும் இல்லை' என்று பெருமையாக நினைத்துப் பேசுகின்றூர்களே! அவர்களின் அறியாமைக்கு மனம் வருந்துகிருர். புலன்களுக்கு ஒவ்வாததான புலாலுணவு புசிப்பவர்களும் புரட்டாசியில் ஊன் உணவை ஒதுக்குகின்றனரே! மக்கள் இறைவன் திருவடி நிழலையடைந்து பிறவாப் பேரின்ப வாழ்வு எய்தவில்லையே எனக் கலங்குகிருர். தொண்டரடிப் பொடியாழ்வார் அருளிய 'திருமாலை' பாசுரங்கள் 45. எளிமையானவை. அருமையானவை. அதனில் நான்காவது பாசுரம்தான் இந்த வரலாற்றினை இயம்புகின்றது. 'மொய்த்தவல்வினையுள் நின்று மூன்றெழுத்து உடைய பேரால், கத்திரபந்தும் அன்றே பராங்கதி கண்டு கொண்டான், இத்தனை அடியரானார்க்கு இரங்கு நம் அரங்கனய, பித்தனைப் பெற்றும் அந்தோ பிறவியுள் பிணங்குமாறே' என்பதுதான் அந்தப பாசுரமாகும்.

'வேண்டியபோது அடியார், வேண்டிய போகமது வேண்ட வெருது உதவும் பெருமாளே!' என்பது அருணகிரியாரின் திருவேங்கடமலைத் திருப்புகழாகும். நான் சொன்னது கிடையாது, சொல்ல மாட்டேன் என்றெல்லாம் வீண் விவாதம் இன்றி யாவரும் 'கோவிந்தா' சொல்லுங்கள்.

அத்வைதமத ஸ்தாபகர் ஆதிசங்கர பகவத் பாதாள். அவர் பாடுவார் 'பஜ கோவிந்தம், பஜகோவிந்தம், கோவிந்தம் பஜ மூடமதே'. கோவிந்தனை பஜனை செய் என மும்முறை கூறுகிருர். காரணம் அவரே சொல்வதைக் கேட்போம். 'ஸம்ப்ராப்தே ஸந்நிஹிதே காலே நஹி நஹி ரக்ஷதி டுக்ருஞ் கரணே' அதாவது அந்திம காலத்திலே நமக்குத் துணை புரிவது அந்த நாமாதான் வேறில்லை என அறுதியிட்டுக் கூறுகிருர்.



ஸ்ரீ லக்ஷ்மி ஹயக்ரீவர்-மணிமண்டபம் — சென்னை-49.
திரு. ஸ்ரீநிவாசராகவன்—சென்னை.

பஜனை பாடுவோர் சொல்வது என்ன? 'சர்வத்ர கோவிந்த நாம சங்கீர்த்தனம்' 'கோவிந்தா கோவிந்தா' என்பது தானே. மாரியம்மன், கங்கையம்மன் ஆலயங்களிலும், அம்மனை ஆவாஹனம் செய்த 'கடம்' (குடம்) அலங்கார ஊர்வலத்தின்போதும் உரைக்கும் நாமம், 'கோவிந்தா' என்பது தானே. நான்கு பேர் சுமந்து செல்கிருர்களே சடலம்-உயிரற்ற உடலம் - அப்போது கூறிச் செல்வது 'கோவிந்தா கோவிந்தா'.

சூடிக்கொடுத்த சுடர்க்கொடி, நம்மையெல்லாம் 'ஆண்டாள்', தான் பாடிய கோதை தமிழ், திருப்பாவை தன்னிலே கடைசி மூன்று பாசுரங்களில் மட்டும்தான் முத்தாய்ப்பு வைத்தாற் போலே மும்முறை 'கோவிந்தா' என அழைக்கிருள் 27வது பாசுரத்தில் 'கூடாரை வெல்லும் சீர்க் 'கோவிந்தா' என்றும் 28வது பாசுரத்தில் 'குறைவொன்றுமில்லாத 'கோவிந்தா' என்றும், 28 வது பாசுரத்தில் 'இற்றைப்பறை கொள்வான் அன்று காண் 'கோவிந்தா' என்றும் கூறி முடிக்கிருள்.

எனவே 'கோவிந்தா கோவிந்தா' என்று வாயினல் பாடி மனத்தினல் சிந்தித்தால் போய பிழையும், புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும். ஆதலால், அந்த நாமம் சொல்லி நாமும் உய்வுபெறுவோமாக!

# திருமலை திருப்பதி தேவஸ்தானம்

# ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்ய அன்னதான திட்டம்

இவ்வுலகில் ஏழைகளுக்கு உணவு இடுதலைவிட வேறு எந்தவிதமான தர்மமும் சிறந்தது இல்லை. அதிலும் திருவேங்கடவன் குடி கொண்டிருக்கும் திருமலையில் யாத்திரிகளுக்கு இலவசமாக உணவு வழங்குதல் மிகவும் அருளுடையது. இவ்வகையில் தி.தி. தேவஸ்தானம், திருமலைக்கு வரும் பக்தர்களுக்கு இலவசமாக "முழுச் சாப்பாடு" அளிக்கும் வகையில் "ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்ய அன்னதான திட்டம்" ஒன்றினை செயற்படுத்தியுள்ளது.

## திட்டம் எப்படி வேலை செய்கிறது

* தேவஸ்தானத்திற்கு ரூ. 10 இலட்சம் அல்லது அதுபோன்று பல மடங்கு நன்கொடை அளிக்கவேண்டும். தி.தி.தே. அத்தொகைக்கு ஈடான தன் பங்கினைச் செலுத்தும். மொத்தத்தொகைக்கு வரும் பட்டித் தொகையிலிருந்து நாள்தோறும் 400 யாத்திரிகர்களுக்கு உணவு வழங்கப்படும்.
* நன்கொடைகள் யாவும் தனிமனிதர்கள், சிறு கழகங்கள், தனியார் நிறுவனங்கள் ஆகியோரிடமிருந்து பெறப்படும்.
* உணவு அருந்தும் கூடத்தில் நன்கொடையாளர்களின் பெயர் முக்கிய இடத்தில் வைக்கப்படும்.

## பயன்களும் உதவிகளும்

* வருடத்தில் மூன்று நாட்களின்போது திருமலையில் நன்கொடையாளர் தன் குடும்பத்தாருடன் இலவசமாகத் தங்கவும், மேலும் அவர்களுக்கு ஹாரத்தியுடன் இலவச தரிசன வசதியும் செய்து தரப்படும்.
* எண் 80 (ஜி) பிரிவின்கீழ் நன்கொடையாளர்கள் வருமான வரிவிலக்குப் பெறுவார்கள்.
* நாள்தோறும் நடைபெறும் இறைவனின் கொலுவு சேவையின்போது நன்கொடையாளரின் பெயரும் கோத்ரமும் வாசிக்கப்படும்.
* இத்திட்டப்பணியினை மேற்பார்வையிடும்வகையில், ஆலோசனைக்குழுவின் உறுப்பினர்களாக நன்கொடையாளர்கள் சேர்க்கப்படுவர்.

இதுவரை கீழ்வரும் நபர்கள் இத்திட்டத்திற்கு நன்கொடை அளித்துள்ளனர்.

1. திரு. எல். வி. ராமய்யா - சென்னை. ரூ. 10 இலட்சம்
2. திரு. மன்சிங்கா - பம்பாய். ரூ. 20 இலட்சம்
3. திரு. ஆர். பி. கோயங்கா - கல்கத்தா ரூ. 10 இலட்சம்
4. திரு. ஈஸ்வர் பிரஸாத் பொத்தார் - கல்கத்தா. ரூ. 10 இலட்சம்
5. திரு. திருபாய் எச். அம்பானி - ரிலையன்ஸ் டெக்ஸ்டைல் இண்டஸ்ட்ரீஸ் - பம்பாய் ரூ. 10 இலட்சம்

மேலும் பல பக்தர்கள் பயன் பெற தாராளமாக உதவுங்கள்.

மேலும் தகுந்த விவரங்களுக்கு :

செயலாட்சித்தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி - 517501. ஆந்திர மாநிலம்.

செயலாட்சித்தலைவர்.

# கிருஷ்ணுட்டங்களி



மலையாளத்தில், அவிநயக்கை முத்திரையைப் பிராதமாகவுடைய ஆட்டங்கள் பலவகை இருக்கின்றன. அவ்வகையிற் முக்கியமானவை கூடியாட்டம், மோகினியாட்டம், ஆட்டக்கதை அல்லது கதகளி, கிருஷ்ணுட்டம், அஷ்டபதியாட்டம் என்றிவைதான்.

கூடியாட்டத்தைப் பற்றி சில கிரந்தங்கள் செய்து மிகவும் பிரசாரத்திற்குக் கொண்டு வந்தவர் குலசேகரப் பெருமாள் என்கிற குலசேகர ஆழ்வாரும், அதை முறையே நன்கு சீர்த்திருத்தி (பரிஷ்கரித்து) இன்றிருக்கும் நிலைக்குக் கொண்டு வந்தவர் அவர் மகன் பாஸ்கர ரவிவர்மப் பெருமானுமாம்.

மோகினியாட்டம் என்பது சிலப்பதிகாரத்தின் உரையில் அடியார்க்கு நல்லார் கூறியிருக்கிற "அவியைக் கூத்து" என்பதுதான். கதகளி இப்பொழுது லோகமெங்கும் பிரசித்தி பெற்றிருக்கிறது. அதனுல் அதைப் பற்றிச் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை.

அஷ்டபதியாட்டமென்பது கதகளியை அனுசரித்து ஜயதேவருடைய கீதகோவிந்தத்தை ஆட்டமாகச் செய்ததே! கதகளியைப் போல் புகழக் கூடிய ஆட்டம்தான் கிருஷ்ணுட்டம். ஆனுல், இதற்கும் அஷ்டபதியாட்டத்திற்கும் மற்றவை போல் பழமையில்லை. கி. பி. 17-ம் நூற்ருண்டில்தான் கிருஷ்ணுட்டம் தோன்றியது.

"கிருஷ்ணுட்டம் என்னும் நூல் முழுவதும் வடமொழியிற் செய்யப் பட்டுள்ளது. இது கிருஷ்ணுவதாரம், காளியமர்த்தனம், இராஸக்ரீடை, கம்ஸவதம், சுயம்வரம், வாணுசுர யுத்தம், விவிதவதம், சுவர்க்காரோஹணம் என எட்டு நாட் கதைகளாக அவிநயிக்கப்படுகின்றது.

கிருஷ்ணுவதாரம், காளியமர்த்தனம் என்று இவ்வாறு ஒவ்வொரு நாட்கதைக்குப் பெயர் கொடுத்திருப்பினும், அவை ஒவ்வொன்றிலும்முன் பின் உள்ள வரலாறுகளும் ஏற்றவாறு அமைக்கப்பட்டுள்ளன. கிருஷ்ணுட்டம், கதகளி போன்று விடியும் வரை அவிநயிக்கப்படுவதில்லை. இரவு பதினெட்டு நாழிகை வரைக்குமே அவிநயிக்கப்படும்.

வேஷங்கட்டுவதிலும் பிறவற்றிலும் கதகளியினும் சில வேறுபாடு இவ்வாட்டத்தில் உண்டு. அன்றியும், கிருஷ்ணுட்டம் ஸாமூதிரியின் அதீனத்தில் உளது. அதற்கெனத் தனியே ஒரு 'முழு' (யோகம்) உண்டு. அக்குழுவினருக்குச் செல்லும் செலவெல்லாம் அரண்மனையினின்றே அளிக்கின்றனர். கதைகளிக்குழுவோ பெரும் செல்வர் பலருடைய அதீனத்திலும் உண்டு. எவ்விடத்திலும் யாரும் அதனை எளிதாக அவிநயிப்பிக்கக் கூடும்

ஆனுல், கிருஷ்ணுட்டமோ ஸாமூதிரியின் அரண்மனையிலும், ஒரு சில செல்வச் சீமான்கள் குடும்பங்களில் மட்டுமே அல்லது கோயில்களில் மட்டுமே அவிநயிக்கலாகும்; வேறு எந்தவிடத்திலும் அவிநயித்தல் கூடாது. கிருஷ்ணுட்டத்திற்கு இத்தகைய தெய்வத்தன்மை உண்டென்று கருதி வருகின்றனர். இதற்கு ஓர் ஐதீகமும் கூறுகின்றனர். அது வருமாறு:

'சன்மிஷ்டை'
தஞ்சாவூர்.

பக்த சிரோமணியாகிய வில்வமங்கலம் ஸ்வாமிகள் 'மான வேதன்' என்னும் சாமூதிரியரசருக்கு ஸ்ரீ கிருஷ்ண தரிசனம் கிடைக்குமாறு செய்தார். அப்பொழுது அரசர் ஸ்ரீகிருஷ்ணனை எட்டிப்பிடிக்கக் கருதினுர். அதற்கு 'ஸ்ரீகிருஷ்ணன், வில்வ மங்கலம் அவ்வாறு என்னிடம் சொல்லவில்லை' என்று அருளிச் செய்து மறைந்தானு யினும், அவனது திருமுடியில் அணிந்திருந்த மயிற்பீலியொன்று மட்டும்

(48-ம் பக்கம் பார்க்க)

# தெரிந்தும் தெரியாதன....

திரு. ஏ. சுந்தரராஜன்
சென்னை

**அரங்கம் :**

அரங்கம், திருவரங்கம், ஸ்ரீரங்கம் பூலோக வைகுண்டம் என்று வழங்கப்படும் இத்தலம் திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் காவிரிக்கும் கொள்ளிடத்திற்கும் இடையில் உள்ள தீவில் அமைந்துள்ளது. பாரதத்திலுள்ள புண்ணிய க்ஷேத்திரங்களில் தலை சிறந்தது. இங்குக் கோயில் கொண்டுள்ள பெருமான் ஸ்ரீரங்கநாதன், அரங்கன், அழகிய மணவாளன், பெரிய பெருமாள் என்று பலவகையாகப் போற்றப் படுபவன்.

ஆதியில் சத்தியலோகத்தில் பிரமதேவன் ஆராதித்து வந்த இப்பெருமானை இட்சுவாகு மன்னன் தவம் செய்து பெற்ருன். பின்னர் அக்குலத்தினர் இராமபிரான் காலம் வரையில் குலதெய்வமாக வழிபட்டுவந்தனர். ஸ்ரீராமபிரான் இராவணனை வதம் செய்த பின் அவன் தம்பியான விபீடணனுக்கு, இப்பிரானை ஆசி கூறிக் கொடுத்தார். விபீடணன் இப்பெருமானை இலங்கைக்கு எடுத்துச் செல்லும் வழியில், ஸ்ரீரங்கம் சந்திரபுஷ்கரிணிக் கரையில் சிறிது தங்க, இத்தலத்தையே பகவான் உகந்து திருக்கோயில் கொள்ளவே, விபீடணன் அவருக்குச் சந்திர புஷ்கரிணிக் கரையிலேயே கோயில் கட்டி விழாக்கள் கொண்டாட ஏற்பாடு செய்ததாக புராணம் கூறுகிறது.

இத்தலத்திலுள்ள அழகிய மணவாளப் பெருமானை வைணவ ஆழ்வார்களில் பதினொராழ்வார்கள் பாடியுள்ளனர். மேலும் குலசேகராழ்வாராலும் திருமங்கையாழ்வாராலும் இக்கோயிலில் பல திருப்பணிகள் செய்யப்பட்டிருக்கின்றன. திருப்பாணாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், ஆண்டாள் ஆகிய ஆழ்வார்களும், ஆளவந்தார், இராமானுஜர் ஆகிய ஆசாரியர்களும் முக்தியடைந்தது இத்தலத்திலேதான். பெரியநம்பிகள், பட்டர், வடக்குத் திருவீதிப்பிள்ளை, உலகாரியன் முதலிய வைணவப் பெரியார்கள் தோன்றியதும் இத்தலத்திலேதான்.

இத்திருவரங்கத்துக் கோயில் ஒன்றே ஏழு பிராகாரங்கள் கொண்ட ஒரு முழுத் திருக்கோயிலாகக் கருதப்படுகிறது. இதனால்''பெரிய கோயில்'' என்ற சிறப்பையும் பெற்றுள்ளது. ஏழாவது திருமதிள் வீதி சித்திரை வீதி எனவும், ஆருவது வீதி திருவிக்ரமன் (சோழன்) வீதி எனவும், ஐந்தாம் வீதி அகளங்க நாட்டாழ்வான் வீதி எனவும் நான்காம் வீதி ஆலிநாடன் (திருமங்கை மன்னன்) வீதி எனவும் வழங்கப்படுகின்றன. ஆலி நாடன் வீதியில் முதலாழ்வார்கள் சந்நிதிகளும், சந்திரபுஷ்கரிணி, கொட்டாரம், ஆரியபட்டாள் வாசல் முதலியனவும் உள. வடகிழக்குப் பக்கத்தில் ஆயிரம் கால் மண்டபம் உளது.

மூன்ருவது திருவீதி குலசேகர மன்னனால் நிருமாணிக்கப்பட்டது. குலசேகரன் வீதி எனப்படும் இவ்வீதியில் கொடிமரம், பலிபீடம், பரமபத வாசல், மடப்பள்ளி, நாழிகை கோட்டான் வாசல் முதலியன உள்ளன.

இரண்டாம் திருவீதி ராஜமஹேந்திரன் திருவீதி எனப்படும். இதில் கருவூலம், யாகசாலை, சேனை முதலியார் சந்நிதி, ரேவதி மண்டபம், கிளி மண்டபம், துருக்க நாச்சியார் சந்நிதி, கண்ணுடி அறை, அஷ்டாட்சரப்படி, காயத்ரி மண்டபம் ஆகியவை இருக்கின்றன.

முதல் திருவீதி, தர்மவர்மன் என்ற அரசனல் அமைக்கப்பட்டது. தர்மவர்மன் திருவீதி என்று அழைக்கப் படுகிறது. இவ்வீதியின் நான்கு மூலைகளிலும் நாராயணர், நாபி நளினர், நாகசயனர், நரசிம்மர் என்ற நான்கு மூர்த்திகளும் இருந்து கொண்டு அரங்க விமானத்தைக் காவல் காத்து வருகின்றனர்.

இந்த ஏழு பிராகாரங்களின் மொத்தப் பரப்பு சுமார் 160 ஏக்கர்கள். மதில்களின் மொத்த நீளம் ஆறு மைல்கள்.

அரங்க விமானம் பிரணவாகார விமானம். நான்கு வேதங்களும் ஆறு சாத்திரங்களும் தூபிகள். தென்புறத்தில் பரவாசுதேவன் விமானத்தின் வெளியில் மேல்பாகத்தில் விக்கினேஸ்வரரும் கீழ்பாகத்தில் துர்க்கையும் உளர். இவ்விமானத்துள்ளே ஐந்தலை அரவணையில் அரங்கநாதர் குடதிசை முடியை வைத்து, குணதிசைப் பாதம் நீட்டி, வடதிசை பின்பு காட்டி, தென் திசை இலங்கை நோக்கியும் வலக் கையால் தமது முடியையும் இடக்கையால் தம் திருவடிகளையும் பக்தர்களுக்குக் காட்டிக் கொண்டும் கண் வளர்கிருர். விமானத்தின் வாயிலுக்குத் திருவணுக்கன் வாயில் என்று பெயர். இவ்வாயிலின் உட்புறத்தையொட்டி இரு தூண்கள் பர வாசுதேவனுடைய கால்கள் எனலாம்படி அமைந்திருக்கின்றன. இவற்றுக்கு மணத்தூண் என்று பெயர்.

இங்கு வைகுண்ட ஏகாதசி விசேஷ நாள்.

**அனந்த சயனம்**

திருவனந்தபுரம் என்னும் மலைநாட்டுத் திருப்பதி. பெருமாள் அனந்தபத்மநாபர்; பிராட்டியார் ஸ்ரீஹரிலக்ஷ்மி நாச்சியார். கிழக்கே திருமுக மண்டலம்; அனந்தசேஷனின் மீது பள்ளி கொண்ட திருக்கோலம். ருத்திரன், சந்திரன், இந்திரன் ஆகியோருக்குக் காட்சி. நம்மாழ்வாரால் மங்களாசாஸனம் செய்யப் பட்ட திவ்ய தேசம்.

இக்கோயில் கி. மு. 3100-ல் எடுப்பிக்கப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. இதன் ஏழடுக்குக் கட்டடம் வானளாவியது; அழகிய சிற்பங்கள் கொண்டது. ★

# "ஆவணி அவிட்டமும் காயத்ரி ஜபமும்"

இந்து மதக்கொள்கைப்படி அன்னை வயிற்றில் ஜனிக்கும் பிறவியுடன், ஞானப்பிறவி என்ற ஒருபிறவியையும் இந்தப் பிறவியிலேயே அடையலாம். இருபிறவியை அடைவதால் இருபிறப்பாளர்கள் என்று பார்ப்பனர்களைக் கூறுவது உண்டு.

பார்ப்பனர்களும், மன்னர்களும், வணிகர்களும் பூணூல் தரிக்கும் மற்ற வகுப்பினர்களும் இந்த இருபிறப்புக் கொள்கையில் நம்பிக்கை கொண்டவர்கள் ஆவார்கள்.

ஆதிகாலத்தில் பிறப்பால் பிராமணர் என்றும், அரசர் என்றும், வணிகன் என்றும் தொழிலாளர் என்றும் வேற்றுமை பாராட்டும் வழக்கம் நமது நாட்டில் இல்லை. வேத காலத்தில் தொழில் பற்றியே சிலர் அந்தணர் ஆகவும் சிலர் மன்னராகவும் வேறு சிலர் வியாபாரிகளாகவும் பலர் தொழிலாளர்களாகவும் எண்ணப்பட்டனர் என்பது ஆராய்ச்சியாளர்களின் கருத்து. பூணூல் தரித்தவர்களை "துவிஜர்" அல்லது இருபிறப்பாளர் என்று குறிப்பிட்டார்கள்.

இருபிறப்பாளர் உபநயனம் என்ற சடங்கின் மூலமாகிய பூணூல் அணிந்து கொண்டு, கூட ஒரு ஞானக் கண்ணையும் பெற்றதாகக் கருதினார்கள். உபநயனக்காரர்கள் கொண்டாடும் "உபாகர்மம்" என்ற சடங்கு தான் ஆவணி அவிட்டம் என்று தமிழில் கூறப்படுகிறது.

ஆவணித்திங்களில் ஆகஸ்டு-செப்டம்பரில் பௌர்ணமியில் யஜுர் வேதத்தைப் பின்பற்றுபவர் ஆவணி அவிட்டம் கொண்டாடுவார்கள். இதற்கு இடையூறு ஏற்பட்டால் புரட்டாசித் திங்களில் பௌர்ணமி நாளில் கொண்டாடுவார்கள். இந்த பௌர்ணமியும் பொருத்தமில்லை என்றால் ஆடிப் பௌர்ணமியைத் தேர்ந்தெடுப்பார்கள்.

ரிக்வேதிகள் ஆவணித் திங்களில் சிராவண நட்சத்திரம் உச்சத்திலிருக்கும் போதும், சாமவேதிகள் ஹஸ்த நட்சத்திரமும் பஞ்சமி திதியும் கூடிய நாளிலும் ஆவணித் திங்களில் உபாகர்மம் நடத்துகிறார்கள். சாம வேதிகள் வேறு விதமாக உபாகர்மம் கொண்டாடுவதும் உண்டு.

இந்நாளில் வேதம் ஓதுவது விசேஷ பலனை அளிக்கிறதாம். பிதுர்களைக் குறித்தும், ரிஷிகளைக்குறித்தும் தர்ப்பணம் செய்வது இந்த விழாவின் சிறப்பு அம்சமாகும். மாண்டுபோன முன்னோர்களை அறவே மறந்து விடாது நமது சமய ஞானத்தின் மூல பொக்கிஷமான வேதங்களையும், சமயக் கொள்கைகளையும்,விழாக்களையும் பாதுகாத்து நமக்கு வழங்கிய முனிவர்களின் நினைவை மறக்காமல் உள்ளத்தில் மலரச்செய்வது இப்பண்டிகையின் கருத்து ஆகும். வேதங்கள் பரமசிவனையும், திருமாலையும் பரம் பொருளாகக் கூறுகின்றன.

வேதமந்திரங்களில் மிகவும் முக்கியமானது காயத்திரி ஜபம். அது பின் வருமாறு:

"ஓம்பூர்ப் புவ ஸ்ஸுவ:, தத் ஸவிதுர் வரேண்யம், பர்க்கோ தேவஸ்ய தீமிஹி, தியோயோன: ப்ரஜோதயாத்" என்ற காயத்ரி ஜபத்தை விஸ்வாமித்திர ரிஷி என்பவர் ஸ்ரீராம லக்ஷ்மணர்களுக்குப் போதித்ததாக இதிகாசமாகிய ஸ்ரீஇராமாயணம் கூறுகின்றது. இம் மந்திர உச்சாடத்தினால் காமம், குரோதம், மோகம், லோபம், மதம், மாச்சிரியம் ஆகிய தீய் குணங்கள் நீங்கி மனிதனுக்குச் சரீரபலம், ஆத்ம பலம், புத்தி பலம், மனோபலம், கடவுள் பக்தி, ஞானோதயம் முதலியன ஏற்படும் என்பதற்கு எட்டுணையும் ஐயமில்லை.

வேதமந்திரங்களில் முக்கியமான காயத்தரி ஜபத்தை பலமுறை தினந்தோறும் ஜபித்தால் அகக்கண் திறந்து ஞானம் பிறக்கும் என்று நம்புகிறார்கள். "ஆரிய சந்திர" கிரஹண காலத்தில் இதை ஜபிப்போர் வேண்டிய பலன்களையும் அடைவார்கள். நினைத்த காரியங்களையும் முடிக்கும் திறமை ஏற்படும். ஆவணித் திங்களில் தேய்பிறையில் முதல் நாளில் காயத்தரி ஜபம் செய்தால் சொற்ப முயற்சிக்கும் பூர்ண பலன் உண்டு. இந்த நாளைக் காயத்தரி ஜபதினம் என்பார்கள். இம்மந்திரம் ஒளி வேண்டியும், அறிவு வேண்டியும், பிராண சக்தி வேண்டியும், சூரிய பகவானைப் பிரார்த்தனை செய்து கொள்ளும் பெருநோக்கத்துடன் உருவாக்கப் பெற்றது என்பதில் சிறிதும் ஐயமில்லை.

ஞான சூரியனாகிய பரம்பொருளை தியானிப்பது உட்பொருளாகக் கருதத் தக்கது. காலை வேளையில் சூரியனை நோக்கிய வண்ணம் காயத்தரி ஜபத்தை உருவேற்றுவது வழக்கம். இந்த ஜபத்திற்கு ஒரு பிராணாயாமம் செய்து மூச்சுப் போக்கையும்(கட்டுப்படுத்தி) ஒழுங்கு செய்து கொள்வதும் உண்டு. ஒருமை உள்ளத்துடன் காயத்தரி ஜபம் செய்வதே பலன் தருவதாகும்.


**திரு. E. நடராஜய்யர்,**
*கோபிசெட்டிபாளையம்.*

பிராணுயாம மந்திரம் :

ஓம் பூ: ஓம் புவ: ஓம சுவ: ஓம் மஹ: ஓம் ஜன: ஓம் தப: ஓகும் சத்யம் ஓம் சத் சவிதுர் வரேண்யம் பர்க்கோ தேவஸ்ய தீமஹி, தியோ யோ ந: ப்ரசோதயாத் ஓமாபோ ஜ்யோதீர் ரஸாம்ருதம் ப்ரம்ஹ பூர் புவஸ்வரோம்'' என்று வலது ஸ்ரீக் கைப் பெருவிரலால் பிடித்து முறைப்படி பிராணுயாமம் செய்து காயத்தரி தொடங்குவது நலம்.

காயத்தரி மந்திரத்தைப் பொருள் தெரிந்து ஜபிப்பதால் சிறந்த நற்பலன் ஏற்படும். ஓதுவதிலோ உருவேற்றுவதிலோ பலன் ஏற்படாது. மனதைப் பலபக்கம் திரியவிட்டு வாய்மட்டும் மந்திரத்தை முணுமுணுத்தால் நற்பலன் கிட்டாது. சுத்தமான ஆசனத்திலிருந்து கொண்டு, 'ஒருமையுள்ளத்துடன் மந்திரத்துடன் மந்திர ஜபம் செய்து தியானத்தில் ஈடுபடவேண்டும். அப்பொழுதுதான் முழுப்பலன் சித்திக்கும். உள்ளத்திற்குள்ளிருந்து ஞான சூரியன் உதயமாகி ஒளியையும், உயிர் சக்தியையும் வீசுவதாகத் தியானித்துக் கொண்டு காயத்தரி ஜபம் செய்வது விசேஷ நன்மை தரும் என்பது வேதாந்திகளின் நம்பிக்கை. இந்த காயத்தரி ஜபம் 108 முறையோ 1008 முறையோ அல்லது பத்துத் தடவையோ அவரவர் சௌகரியத்திற்கு உகந்தவாறு நடைபெறலாம் 1008 தடவைக்கு மேல் ஜபம் செய்வதும் உண்டு. ஜபமாலேயோ, ருத்திராட்சமோ வைத்துக் கொண்டும் ஒரே மன நிம்மதியுடன் ஜபம் செய்ய வேண்டும்.

இம்மந்திரத்தை ஓதுவோர் மேலான பதவி அடைவர் என்று வேதங்கள் அறுதியிடுகின்றன. “ ஐயமிடுமின் அறநெறியைக் கைப்பிடிப்பின், தெய்வம் ஒருவர்என்று உணர்வல்லீரேல் அறுவினேகள் ஐந்தும் அறும்”



45-ம் பக்கம் தொடர்ச்சி)

அரசருக்குக் கிடைத்தது. அது இன்றும் ஸ்ரீகிருஷ்ண வேஷம் கட்டுபவன் சூடும் முடியில் உளது என்பதாம்.

ஜய தேவருடைய 'கீத கோவிந்தம்' போன்று கிருஷ்ணனுட்டமும் செய்யுள், பதம் இவற்றுல் இயன்றுளது அன்றி, தண்டகமும் ஒரே வழி உண்டு. இவையனேத்தும் ஸ்ரீ கிருஷ்ணனே விளித்துக் கூறும் முறையில் அமைந்துள்ளன.

இந்நூலுக்கு வடமொழிப் பெயர் "கிருஷ்ண கீதி" என்பது. இக் கவிதைப் படிப்போர் உள்ளத்தைக் கொள்ளே கொள்ளும்; பக்திப் பெருக்கை உண்டாக்கி கைத்தாளம் போட்டுப் பிறர் மனத்தைக் கவரும் தன்மையது எனலாம். நூல் முழுவதும் இயைபுத்தொடை (அந்த்ய ப்ராஸம்) அமையப் பெற்றுள்ளது என்பது முக்கிய குறிப்பாகும்.

ஆயின், இந்நூல் 'கீத கோவிந்த'த்தைப் போன்று லளிதமாயும் மிக்க மதுரமாயும் அமைந்திருக்கவில்லே என்பர். கீத கோவிந்தத்தில், ஸ்ருங்காரத்தின் வகையான ஸம்போக ஸ்ருங்காரத்திற்கும், விப்ரலம்ப ஸ்ருங்காரத்திற்குமே இயைபு உண்டு. என்னேயெனின், அதிலுள்ள கதை அத்தகையதே!

கிருஷ்ணனுட்டத்திலோ போர், கொலே, திருட்டு முதலிய பல சம்பவங்களும் உள்ளன. அவற்றுல், உத்தம வீரம், கருணே, அற்புதம் முதலிய ரஸங்களேப் பின்பற்றி வன்மையாயும் மிக்க இனிமையாயும் செறிவாயும் இந்நூல் அமைந்துள்ளது என்று ஆன்றோர்கள் அறுதியிட்டுக் கூறுவர்.

"ஸ்ரீகிருஷ்ணனுட்டம்" என்னும் இந்நூலின் ஆசிரியர் யார் எனில் 'ஆனுயத்துக் கிருஷ்ணப் பிஸாரோடியார் சீடனும், விக்ரமன் என்ற ஸாமூதிரியின் மருகனும் ஆகிய 'மான வேதன்' என்னும் தம்பிரான்' இவன் ஸ்ரீ கிருஷ்ணபிரானிடம் மிக்க பக்தியுள்ளவன்; ஆச்சார சீலன்.

ஸ்ரீ கிருஷ்ணனுக்குப் பூஜை, நெய் வேத்தியங்கள் செய்த பின்பே உண்ணும்பேறு பெற்றவன். இவனுக்கு ஸ்ரீ கிருஷ்ண பகவானே குழந்தை ரூபத்தில் நேரிடையாகக் காட்சி கொடுத்தான் எனச் சொல்லப்படுகிறது. இந்நூல் இயற்றிய காலம் மலேயாளத்துக் கொல்லம் ஆண்டு 829 அதாவது கி. பி. 1654 என்பதாக அந்நூலில் கூறப்பட்டிருக்கிறது.

Edited and Published on behalf of the T. T. Devasthanams by K. Subba Rao, M.A. and Printed at T. T. D. Press by M. Vijayakumar Reddy Manager, T. T. D.Press, Tirupati-517501.

Regd. No. H/TRP/12 வருடச் சந்தா ரூ. 1

# ஸ்ரீ வேங்கடேஸ்வரசுவாமி கோயில், திருமலை
# வருடாந்திர பிரம்மோற்சவம்
## 3-10-86 முதல் 12-10-86 வரை



| தேதி | கிழமை | பகல் உற்சவங்கள் | இரவு உற்சவங்கள் |
|---|---|---|---|
| 3-10-86 | வெள்ளி | —— | சேனாதிபதி உற்சவம், அங்குரார்ப்பணம் |
| 4-10-86 | சனி | துவஜாரோஹணம், திருச்சி உற்சவம் | பெரிய சேஷவாகனம் |
| 5-10-86 | ஞாயிறு | சிறிய சேஷ வாகனம் | ஹம்ஸ வாகனம் |
| 6-10-86 | திங்கள் | சிம்ஹ வாகனம் | முத்துப்பந்தல் வாகனம் |
| 7-10-86 | செவ்வாய் | கல்பவிருக்ஷ வாகனம் | ஸர்வபூபால வாகனம் |
| 8-10-86 | புதன் | பல்லக்கில் மோகினி அவதாரம் | கருடோத்சவம் |
| 9-10-86 | வியாழன் | ஹனுமந்த வாகனம் (மாலையில் வசந்தோத்சவம்) | கஜவாகனம் |
| 10-10-86 | வெள்ளி | சூர்ய ப்ரபை | சந்திரப்ரபை |
| 11-10-86 | சனி | ரதோத்சவம் | ஹஸ்வ வாகனம் |
| 12-10-86 | ஞாயிறு | தீர்த்தவாரி அவப்பிரதோற்சவம் | துவஜாவரோஹணம் |